பெரிய எழுத்து

# மயிலிராவணன் கதை





அமரம்பேடு. குழந்தைவேல் முதலியார்
சென்னை தெய்வமகள் விலாச அச்சுக்கூடம்
24. தாண்டவராயப்பிள்ளை வீதி.

இதன் விலை] 1946 [அணா 12





# முகவுரை

கடல்புடைசூழ்ந்த நெடியவுலகத்திலே இராமாயணமென்று கூறத்தக்க இந்த வசனகாவியமானது மானிடருக்குச் சித்தி - முத்தி - பக்தி - வைராக்கியங்களைக் கருதலானும், ஆணவம் - மாயை - காமியம் என்னும் மும்மலங்களை நீக்கலானும், மெய் - வாய் - கண் - மூக்கு - செவி என்னும் ஐம்புலன்களைப் பரிசுத்த மாக்கலானும், சுவை - ஒளி - ஊறு - ஓசை - நாற்றம் என்னும் ஐம்பொருள்களைக் கொடுக்கலானும், பிறவிப்பிணிகள் தீர்க்கலானும், அதிக சிறப்புடையதாய் நீடுபுகழோங்கி நின்றது.

---



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்



# மயிலிராவணன் கதை



## காப்பு விநாயகர் தோத்திரம்

### கலிவிருத்தம்

அயிலும் வில்லு வில்லாகு மந்திரமும்
பயிலு மாபலம் பாரிற் படைத்தவன்
மயிலி ராவணன் மாகதை வழூத்திட
கயிலைமேவுங் கண்பதி காப்பாமே.

### பன்னிருசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

கொங்கணங்கன்னட மீழமராடங் குருதங்கலிங்கம
குருநாடக்கையு ரோமைசலகமிடு குச்சரிமச்சரியம்
வங்கம்மாளவக வாரணைமாகத மகரம்காம்பீலி [கோவை
மலையாளங்கோவைத் திரைடில்லி வழங்கும்பைங்
சிங்களவெங்தந் திடிசெய்யும் ஸ்ரீராமன் கதையை [பாய்
ஜெகதலமதில்வாழ் மானிடரெல்லாஞ் சிந்தைகளித்தன்
சங்கப்புலவோர் கூறியவாறே தமிழிற்கதைசெய்தேன்
தனிமாபாரத மெழுதியவேங்கட ராயன்ருள்சரணே.

அறுசீரடி யாசிரியவிருத்தம்

நாடிய பொருள் கைகூடும் ஞானமும்புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றேள்வலி கூறு வோர்க்கே.

கட்டளைக்கலித்துறை

வடகலை தென்கலை வடுகு கன்னட
மிடமுள பாஷை யாதொன்றி னாயினும்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

இதுவுமது

நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண் டெழுத்தினால்.

---

## கதையின் வரலாறு

இந்த மயிலிராவணனென்கிற இராட்சதனுடைய சரித்திரத்தைச் சிற்றறிவீனனாகிய யான் கதைசொல்லப் போகிறேனென்று நாரதமகாமுனிவர் கௌதம ரிஷிக்குத் தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கினர். கேளுமையா கௌதமரிஷியே! ஆதிகாலத்தில் ஸ்ரீராமனவர், தென்னிலங்கை என்கிறபட்டணத்துக்கு அரசனாகிய இராவணனைச் சம்மாரஞ் செய்யும்பொருட்டாக எழுபது வெள்ளஞ்சேனையுடனே தண்டு திரள்களோடு சுவாமியானவர் சமுத்திரக்கரையிலே போய் இறங்கிச் சேதுவை யணைகட்டி தென்னிலங்கைக்கரையிற் சென்று இராவணனுடனே போர்புரிந்துக்கொண் டிருக்குங் காலத்தில், * அதிகாயன் மகாமாயன் நிகும்பன் அகம்பன் கும்பகர்ணன் சம்புமாலி இந்திரஜித்து முதலான

---

அதிகாயன் : இராவணனுடைய மக்களிலொருவன், நிகும்பன்-கும்பகர்ணன் மகன்.

பற்பல அரக்கர் சேனைகளும் இரணக்களத்திலே கால் வேறு கைவேறு மெய்வேறு துடைவேறு இடைவேறு முழங்கால்வேறு கணுக்கால்வேறு இப்படி நானாவிதமாக வீராதிவீரனாகிய ராவணனுடைய பிள்ளைகளும் ராட்சத சேனைகளும் பலவாருகச்சிதைந்து மாண்டுபோனார்கள்.

இந்த விசேஷமெல்லாம் இராவணன் கேட்டு கையிலிருந்த ஆயுதங்களைக் கீழேபோட்டு திடீரென்று சிங்காதனத்தின்மீதி லிருந்தபடியே பூமியில் விழுந்து அதிக விசாரத்தோடு மூர்ச்சையடைந்தான். சற்றுநேரம் சென்ற பின் மறுபடியும் இராவணன் மூர்ச்சைதெளிந்தெழுந்து அழுது, கடவுளைத் தொழுது மனமென்கிற வில்லைக் குழைத்து, மந்திரிமார்களை யழைத்து, வாருங்கள் மந்திரிமார்களே! ராமலட்சுமணனென்கிற இரண்டு மனிதரும் அநேக வானரசேனையோடுகூட ஓடிவந்து யுத்தங்களானவிடத்திலே அதிகாயன் மகாபாடன் நிகும்பன் அகம்பன் கும்பகர்ணன் சம்புமாலி இந்திரஜித்து மயேந்திரஜித்து முதலிய தப்பிமாரும், அநேகபுத்திராகளும் இரதகஜ துரகபதாதிகளும், யானையும் சேனையும் இழந்ததுமாத்திரம், என்ன புதுமையுடையது, இந்தப் பொல்லாத காயமானது நில்லாமலும், ஒருத்தரோடு சொல்லாமலும் போகுமென்று எல்லாரும அறிவது போல நாமுமறிந்திருந்தும் தம்பிமார்களை யிழந்து தனியாயிருந்து அரசாட்சி செய்வதெப்படி? என்று விசனப்படுகிறபோது, மந்திரிகள் ராவணேஸ்வரனைப் பார்த்து, ஓகோ வாருமையா சுவாமி! நீரே இப்படி விசனப்பட்டால் அடியேங்கள் எப்படி பிழைப்போம் இனிமேலாகிறதென்ன? இப்போது லங்கையிலுண்டான யானை சேனை ஒட்டகமுதல் படைகளையுங்கூட்டி, இந்த இராமலட்சுமணனுக்கு எதிராகக் காட்டி, நமதுடைய சௌரியங்களைக் காட்டி, வானரசேனைகளை வாட்டி, மிதமாக எண்ணி அதம்பண்ணி வருவோம். அஞ்சாதே சுவாமியென்று தைரியங் கூறினர். இதுகளையெல்லாங்கேட்ட இராவணன் மகிழ்ந்து புகழ்ந்து மந்திரிகளைப் பார்த்து ஆர்வங்கொண்டு நல்லது சரிசரி ஆமென்று பலவாருய்க் கூறி ஆணவமீறி தன்னுடைய இராணுவங்களாகிய யானை குதிரை ஒட்டகம் முதலிய சதுரங்க சேனைகளையும் வரும்படி ஆக்யாபித்து, ராவணனானவன் வெளியிலே

வந்து தன்னுடைய தேரின்பேரிலேறி ஜயஜயவென்று கூறிச் சகல ஆடம்பரத்துடனே யுத்தகளத்தில் வந்து நின்றுகொண்டு ராமசுவாமியைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லத் தொடங்கினன்.

ஓ ஓ மானிடர்களே! மரித்துப்போன பிணங்களே! நற்குணமில்லாக் குணங்களே! ஈக்கள் மொய்க்கும் பிணங்களே! என் தம்பிமார்களை நீங்கள் இருவருமல்லவோ கொன்றீர்கள்; நல்லதாகட்டும். இதோ ஓர்நொடியிலே உங்களைக் கொல்லுகிறேன். அம்புகளாலே வெல்லுகிறேன்; எமனுக் கிறைகொடுக்கும்படி கொல்லுகிறேன்; உங்கள் சரீரத்தைச் சல்லடைக்கண்கள்போலத் துளைக்கிறேன் என்று ஆர்ப்பரித்துப் பற்களை நறநறவென்று கடித்து மீசை துடிக்க வில்வளைத்து நாணியேற்றி அண்டகடாகமெல்லாங் கிடுகிடுவென்று நடுங்கும்படி உறுத்தினன். இராமசுவாமிக்குக் கோபம் வந்து தண்டத்தை வளைத்து பாணப்பிரயோகஞ் செய்கிறபோது அநேகமாயிரஞ் சேனைகளும் காலாள்களும் யுத்தகூடத்திலே யிறந்துபோய் இராவணனைவன் ஒருவனுய் நின்று யுத்தம் பண்ணுகிறபோது, இன்னுமனேகஞ் சேனைகளும் இராமசுவாமி பாணத்தினல் அடிபட்டதைக் கண்டு இலங்கைத் தீவுக்கரையிலே தன்னுடைய அரண்மனையிலே போய் அந்தரங்கத்திலே படுத்துக்கொண்டு அதிக விசாரத்துடனிருந்தான். அப்படியிருக்கிற காலத்தில் பிரகஸ்தனென்கிற மந்திரி இராவணன் அண்டையில் வந்து விசாரமாயிருக்கிறவனைப் பார்த்து, பெருமையா சுவாமி! நீர் மகாபராக்கிரமசாலியாயிருந்தும் இப்படித் துயரப்பட்டிருந்தால் ஆகிறதென்னவென்று சொல்லுகிறபோது இராவணன் சொல்லுகிருன்.

வாரும் பிள்ளாய் மந்திரி பிரதானி தண்டத்தலைவனே! நான் சீதையைக் கொண்டுவந்த நிமித்தமாக இலங்கையில் இல்லாத அனர்த்தம் வந்து தம்பிமார்களாகிய கும்பகர்ணன் இந்திரஜித்து முதலானவர் போய் நாளெருவனுமே நின்றேன். இனிமேலிருந்து துயரம் பொறுக்கப்போகிறதில்லையென வெகு விசனமாக அழுகிறபோது மந்திரி சொல்லுகிருன். அந்த இராமலட்சுமணனை ஒருவராலும் வெல்லப்போகாது அந்தச்

சீதையைக் கொண்டுபோய் இராமசுவாமிமுன்னே விட்டு சரணகதியென்று சொன்னால் தயவு செய்வாரென்று சொன்னமாத்திரத்தில் இராவணன் சொல்லுகிறான். வாரும் பிள்ளாய் பிரகஸ்தனே! எனது தம்பியாகிய விபீஷணன் அங்கே இருந்துகொண்டு இத்தனைபேரை யுங் கொல்லச் சொல்லுகிறதினாலே சீதையை விடுகிறது மில்லை; அப்படிப்பட்ட தம்பிமார் போனபிற்பாடு இப் படிப்பட்ட காரியம் நடவாது; அவர்களுக்கு எந்தவழி யாச்சுதோ அந்தவழி நமக்குமாகட்டும்; வேறேயோசனை யில்லையென்று தன்னுடைய துயரமெல்லாமகன்று திடஞ்சொல்லி அழுது மூர்ச்சைதெளிந்தெழுந்து சற்று நேரஞ் சும்மாவிருந்தான். பின்னர் ராவணனைப்பார்த்து மந்திரி சொல்லுகிறான். வாருமையா சுவாமி! ஓர் உபாய மிருக்கிறது. அவர்களை ஜெயிக்குமுபாயம் எப்படியென் றால் பாதாள யிலங்கையிலே உம்முடைய தாயாதிவர்க் கத்திலே தம்பியாகிய மயிலிராவணன் இருக்கிறான். அவனோ மகா மாயாவினோதி; கபடநாடக சூத்திராவ தாரி; சதுர்வித வுபாயி; அவனை மூவராலுந் தேவராலும் யாவராலுஞ் செயிக்கப்போகாது; மகா சுத்தவீரன்; சத் துரு சங்காரன். அப்பேர்ப்பட்டவனிருக்க உமக்கு யோசனை யென்ன? அவன் இந்த எழுபது வெள்ளஞ் சேனையையும் செயிக்க வேண்டுமென்றாலுஞ் செயிப் பான்; அல்லது இராமலட்சுமணன் இருவரையும் பாதாள யிலங்கையிலே காளிக்குப் பலியிடச் சொன்னா லும் பலியிடுவான். அப்படிப்பட்ட பராக்கிரமசாலி யாகிய தம்பியிருக்கும்போது ஏன் துயரப்படுகிறீர்? சீக்கி ரத்திலே மயிலிராவணனை யழைத்து எவ்விதத்திலேயும் இராமலட்சுமணனை ஜெயிக்கவேண்டுமென்று பிரகஸ்த னென்ற மந்திரிகூற, இராவணன் செவியிலே மாமரத் திலே வயிர ஆணிகடாவினாற்போலு மேறிற்று.

இராவணன் இதுமெய்தான் நல்லயோசனை செய் தீரென்று பிரகஸ்தனுக்கும் வேண்டிய வெகுமதி கொடுத்து கனகாபிஷேகஞ் செய்து, பின்பு இராவ ணன் சீக்கிரத்திலே மயிலிராவணன் வரத்தக்கதாக மன திலே நினைத்தான். அப்போது பாதாளயிலங்கையிலே தேவேந்திரன்போல் கொலுவிருக்கிற மயிலிராவணன் யோசனைசெய்து நம்முடைய தமையனாகிய இலங்கா

புரியை யாள்கின்ற இராவணேஸ்வரனுக்கு என்ன ஆபத்து வந்ததோ தெரியாது; அவன் வெகுநாளாக நம்மை நினைததகதில்லை. ஆதலால் என்னவேலையிருந்த போதிலும் இப்போதே போய் உதவிசெய்ய வேண்டுமென்று மனதிலேயெண்ணி யோசனைசெய்து மந்திரிகளை யழைத்து, அப்பா! நான் இலங்கைக்குப் போய் வருகிறேன்; நான் வருமளவும் நீங்கள் சாவதானமாகப் பார்த்திருங்களென்று சொல்லிவிட்டு மயிலிராவணன் இலங்காபுரி பட்டணத்துக்கு வந்துவிட்டான். அந்த இலங்கையின் அதிசயமெல்லாம் பார்த்தான். எல்லாம் பாழா யிருப்பதைப் பார்த்துக்கொண்டு அந்தப்புரம் போனான். இராவணனொருவனு யிருக்கிறதைக் கண்டு மயிலிராவணன் தமையனாகிய இராவணேஸ்வரனுக்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டு ஒருவார்த்தை சொல்லுகிறான். வாருமையா சுவாமி! பட்டணமெல்லாம் பாழா யிருப்பதென்ன? இதுவெல்லாம் உண்மையாகச் சொல்லவேண்டுமென்று அஞ்சலிசெய்து கேட்க இராவணன் சொல்லுகிறான்.

வாரும் பிள்ளாய் தம்பி! முன்னாலே தசரதமகா ராஜாவினுடைய பிள்ளையாகிய இராமலட்சுமணனிருவரும் தண்டகாரணிய வனத்திலே வந்திருந்தார்கள். அப்போது நமது தங்கை சூர்ப்பநகையைப் பங்கஞ் செய்தார்கள். அவளிங்கே வந்து முறையிட்டாள். அப்போது நான் போய் அந்த இராமனிட தேவியாகிய சீதையை எடுத்துக்கொண்டுவந்தேன். அன்று முதல் இலங்கையிலே அனர்த்தம் வந்தது. பின்னர் அனுமாரென்ற குரங்கு சீதையைப் பார்க்க வந்தவிடத்திலே பட்டணமெல்லாஞ் சுட்டுக்கோட்டையைப் பரப்பி அட்சயகுமாரனையும் கொன்று அநேக இராட்சதரையுங் கொன்றுவிட்டுப் போயிற்று. பின்பு இராமசுவாமி அவர் தம்பி இலட்சுமணன் இன்னுஞ் சுக்ரீவன் அங்கதன் நீலன் குமுதன் சாபபுவன் அனுமார் எழுபதுவெள்ளஞ் சேனையையுங் கூட்டிவந்து சேதுவை அணைகட்டி இலங்கையிலேவந்து யுத்தங்கள் செய்து அதிகாயன் மகாமாயன் இந்திரஜித்து கும்பகர்ணன் அநேக இராட்சதர்களும் மாண்டுபோனார்களென்று சொன்னமாத்திரத்திலே இந்த வசனங்களை மயிலிராவணன் கேட்டு மிகவும்

துயரப்பட்டு சகோரபட்சியால் கிளைகள் இலைகள் பழங்க ளுடனே இருக்கப்பட்ட விருட்சமானது அடியோடே அறுந்துவிட்டா லெவ்வாறு விழுமோ அவ்வாறு போலக் கீழே விழுந்தழுது கடவுளைத் தொழுது அடி பணிந்து கோரந்தணிந்து ஒருவாறு மனந்துணிந்து சொல்லுகிறுன்.

வாரும் சுவாமி! நீர் சகலரையுங் கொன்று வென்று சுவர்க்கத்துக்கு அனுப்பினபின்பு எம்மையழைத்தீர். முன்னதாகவே எனக்கு இவ்விதமென்று தெரியாமற் போயிற்றே. இப்போது நான் செய்யவேண்டியதென்ன? என்று கேட்க, இராவணன் கூறுகிறுன். கேளும் பிள் ளாய் தம்பி! இராமலட்சுமணுள் இரண்டுபேரும் மகா பராகிரமசாலிகள். அவர்கள வானரசேனைகளுடனே நம்முடைய தம்பி விபீஷணனையு மழைத்துக்கொண்டு இலங்கையெல்லாஞ் சுட்டு அனர்த்தஞ் செய்துவிட் டார்கள். அந்த இராமலட்சுமணுளை ஒருவராலேயுஞ் ஜெயிக்கமுடியாது. அநேகமான யுத்தங்கள் செய்து இராமபாணத்தின் முன்பாக நிற்கக்கூடாமல் முறிந் தோடி வந்தேன். அவர்கள் மனிதரூபமாயிருக்கவில்லை, அவர்களை சம்மாரஞ் செய்ய எவ்வித வுபாயமுண்டோ அவ்வித வுபாயஞ் செய்யும் பிள்ளாயென்று ராவணன் சொல்ல, மயிலிராவணன் சொல்லுகிறுன், கேளுமையா சுவாமி! அந்த எழுபதுவெள்ளஞ் சேனையையும் இராம லட்சுமணுள் இரண்டுபேரையும் ஆகாயமார்க்கம அதி வினோதத்துடன் கொண்டுபோய் பாதாளயிலங்கையிலே என்னுடைய காளிகாதேவிக்குப் பலிகொடுக்கிறேன் என்று சொல்லி உறுதி செய்துக்கொண்டு தன் அரண் மனை வந்துசேர்ந்து மந்திரிகளோடு தாணிலங்கைக்குப் போனதுவும் அவ்விடத்தில் நடந்த விபரமும் தான் இராவணனுக்குச் சபதஞ்செய்து வந்ததும் இதுக ளெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லி இனிமேல் எப்படி ஜெயிப்போமென்று மந்திரிமார்களோடு ஆலோசனை செய்துக்கொண்டிருந்தான்.

இங்கே இப்படி யிருக்கும்போது சீதாதேவியம்மன் அருகில் காத்துக்கொண்டிருக்கிற விபீஷணருடைய பெண் திரிசடையம்மன் மனதிற் கவலைகொண்டு மயிலி ராவணன்வந்து இராவணனுடனே பிரதிக்கினை செய்து

கொண்டுபோன விசேஷமெல்லாங் கேட்டு, இனி என்ன செய்யப்போகிறோ மென்றெண்ணி, நம்முடைய பிதா வாகிய விபீஷணரும் சுவாமியை சரணகதி என்றடைந் திருக்கிறாரே, அவருடன் இந்த விசேஷமெல்லாம் யாரறிவிக்கப்போகிறார்களென்று மனங்கசிந்து நசிந்து அதிக துக்கத்துடனே அழுதுகொண்டே அவன் மாயா விநோதி கபட நாடக சூஸ்திராவதாரி யென்று யோசனை செய்துகொண்டிருக்கிறபோது வாயுபகவானனவர் அவ் விடத்திற்கு வந்தார். அப்போது திரிசடையானவள் பார்த்து வாருமையா சுவாமி வாயுபகவானே! நானொரு விசேஷஞ் சொல்லுகிறேன். அதைக் குறித்துச் சாவ தானமாகக் கேளும் அதென்னவெனில்: இந்த அதி சயமான விசேஷத்தை யாதாமொருவரு மறியக்கூடா தாகையாலும் நீர் இராமசுவாமிக்கு உயிர்த்துணைவராகை யாலும் நான் உம்முடனே சொல்லுகிறேன். நீர் தவிர மற்றொருவரு மறியக்கூடாது. அது விபீஷணருக்கு மாத்திரந் தெரியுமாகையால் இந்த மயிலிராவணன் இரா வணனுடன் பிரதிக்ஞை செய்துக்கொண்டுபோன விஷ யமென்னவென்றால் இன்றைய இரவில் பதினைந்து நாழிகைக்குமேல் அந்த இராமலட்சுமண ளிருவரையுங் கொண்டுபோய் பாதாளலங்கையிலிருக்கும் தன்னுடைய காளிகாதேவிக்குப் பலியிடுகிறேனென்று பிரதிக்ஞை செய்துகொண்டு போனான். அவன் மாயாவிநோதி. ஒரு வராலேயுஞ் ஜெயிக்கக்கூடாதவன். அவன் எந்தரூப மெடுத்து மோசம் பண்ணுவானோ தெரியாது. அவ னுடைய கபடமெல்லாம் விபீஷணருக்குத் தெரியவரும். இதெல்லாம் அவருக்குச் சொல்லி எவ்வித ஜாக்கிரதை யாயிருக்கவேண்டுமோ அவ்விதமாக யிருக்கச்சொல்லி வரவேண்டுமென்று சொன்னமாத்திரத்தில் வாயுபக வானும் அப்படியே சம்மதித்துப் போய்வருகிறேன் என்று திரிசடையாளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வாயுபகவான் விபீஷணரிடம் போயினர். விபீஷணர் வாயுபகவானைப் பார்த்துச் சொல்லுகிறார்.

வாருமையா சுவாமி வாயுபகவானே! நீரெங்கே வந்தீர்? நானும்மைக்கண்டு வெகுநாளாயிற்று; நீர்வந்த சங்கதியைத் தெரியப்படுத்துவீரையா என்று கேட்க, வாயுபகவானனவர் சொல்லுகிறார்: கேளும் விபீஷ

ணரே! மயிலிராவணனை யழைப்பித்து தன்னுடைய துயரங்களையெல்லாஞ் சொன்னபோது மயிலிராவணன் சொல்லிய தென்னவென்றால், யுத்தஞ் செய்வதற்கு முன்னே சொல்லாமல் இப்போது காரியமுடிந்த பிறகு என்னை யழைப்பித்தீர். ஆகிலும் பெரிதல்ல. உன்பிள்ளையாகிய அட்சயகுமாரன், அதிகாயன், மகாமாயன். இந்திரஜித்து,கும்பகர்ணன் இவர்கள்முதலான சேனைப் படைத் தலைவர்களைக் கொன்றவர்கள் இராமலட்சுமணன் தானே? அப்படிப்பட்ட பராக்கிரமசாலிகளான அவ்விருவரையும் இன்றையதினம் இரவில் பதினைந்து நாழிகைக்குள் எனது பாதாள இலங்கைக்குக் கொண்டு போய் என்னுடைய காளிகாதேவிக்குப் பலிகொடுக்கிறேனென்று கோபதீப்தனுகி சபதங்கூறி தனக்குவேண்டிய திரவியங்களும் பெற்றுக்கொண்டு போனுனும். இந்த சமாசாரங்களை உனது குமாரத்தி திரிசடை கேட்டுக் கொண்டிருந்து இந்த விடத்தி லொருவருமில்லையே யென்று துயரப்பட்டுக்கொண்டிருக்கிற சமயத்தில், நான் அவ்விடத்திற்குப் போனேன். அப்போது திரிசடை யானவள் என்னை அருகினிலழைத்து, சுவாமி! உம்மாலே ஒரு காரியமாகவேண்டுமென்று இந்தவிசேஷங்களை உமக்குச் சொல்லி இராமசுவாமிக்கு அறிக்கை செய்யும்படி சொன்னுளென்று சொல்லிவிட்டு வாயுபகவான் தனதிருப்பிடத்திற்குப் போய்விட்டார்.

வாயுபகவான் போனபின்பு விபீஷணர் அநேக விசாரத்தை யடைந்து இதற்கென்ன செய்வோமென்று மனமிடிந்து அந்த மயிலிராவணன் கபட நாடக சூஷ்திராவதாரி, நானுவிதரூபாதிகாரி, என்னைப்போலும் ரூபமெடுத்து மோசம்பண்ணுவான் என்று, மிகவுமெண்ணி யோசனைப்பண்ணி சுவாமி சபையிலே எவ்வாறு சொல்வோமெனக் கருத்திலிருத்தி யிருந்தனர். சுக்ரீவன் அங்கதன் சாம்புவன் நீலன் நளன் அனுமான் இவ்விதமான எழுபதுவெள்ளஞ் சேனைகளுடனே கொலுவாயிருக்கிற சமயத்தில் ஸ்ரீராமர் விபீஷணரைப் பார்த்து, விபீஷணரே! உம்முடைய முகமானது பூரணசந்திரன்போலும் மலர்ந்த் தாமரைப்போலு மிருக்கப்படாநின்ற முகமானது இன்றைக்கு யாதுகாரணத்தால் கறுகறுத்து அகம் வெறுத்துக் கருகி மனமுருகி துயரம்

பெருகி அதிக விசாரமடைந்திருப்ப தேனென்று இராம சுவாமி கேட்டபோது, விபீஷணன் பயந்து திடீரென் றெழுந்து கைகட்டி வாய்புதைத்து சரீரம் பதைத்து மெள்ள மெள்ள கிட்டச்சென்று சுவாமியைப் பார்த்து நடந்த விசேஷங்கள் யாவுமொளியாமல் சொன்னார். அவைகளியாவும் இராமசுவாமி கேட்டு ஆலோசனை செய்து ஜாம்புவந்தர் முதலாகிய சகலரையும் மழைப் பித்து விபீஷணன் கூறிய விசேஷமெல்லாஞ் சொல்லி, இன்றிராத்திரி பதினைந்துநாழிகையளவில் மயிலிராவ ணன் என்கிறவன் நம்மை யாவரையும் மோசம்பண்ணி, அவனது பாதாள இலங்கைக்குக் கொண்டுபோகிறே னென்று கூறிப் போனானாம். அதற்கென்ன வுபாய முண்டோ அவ்வித வுபாயஞ் செய்யுங்களென்ன, அவ் விசேஷத்தைக் கேட்ட சுக்ரீவன் விபீஷணரைப் பார்த் துச் சொல்லுகிறான். வாருமையா விபீஷணரே! அந்த மயிலிராவணனென்பவன யாவன்? அவனிருப்பிட மெங்கே? அவனது பூர்வோத்திர மென்ன? அவன் ராவணனுக்கு எவ்விதமான பாத்தியஞ் சொல்லுமென்று கூற அதற்கு விபீஷணர் சொல்லுகிறார்.

கேளும் சுக்ரீவ சற்பாத்திரனே! அந்த மயிலிரா வணனென்பவன் பாதாளலங்கையிலே யிருக்கிறவன்; ராவணனுக்குத் தாயாதிவர்க்கத்தில் தம்பியாகவேண்டும். அவனோ மாயாவினோதி, கபடநாடக சூஸ்திராவதாரி, நானாவித ரூபாதிகாரி, அவனை யொருவராலுஞ் செயிக் கப்போகாதென்று விபீஷணர் சுக்ரீவனுக்குச் சொல்ல, அவ்விசேஷமெல்லாம் கேட்டுக்கொண்டிருந்து யோச னைசெய்து இதற்குவுபாயம் அனுமாராலே யாகவேண்டு மென்று நிச்சயம்பண்ணி, சுவாமி யருகில்போய் சுக் ரீவன் அங்கதன் விபீஷணர் சாம்புவர் இந்த நாலுபே ரும் சுவாமியுடனே என்னசொல்லுகிறார்களென்றால், ஓ அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகராய் விளங்கும் இராமசுவாமி பெருமானே! இந்தக் காரியமெல்லாம் அனுமார் ஒருவராலேயே யாகவேண்டுமே யொழிய மற்றொருவராலே யாகாதென்று சொன்னார்கள். இந்த விசேஷமெல்லாம் அனுமார் கேட்டு ஒன்றுமறியாதவர் போல் தலைக் குனிந்துக்கொண்டிருந்தார். அப்போது சுவாமியானவர் வாரும் அனுமாரே! விபீஷணர் கூறிய

விசேஷத்துக்கு என்ன வுபாயமுண்டோ அவ்வுபாயங் களைச் செய்யுமென்று மறுமொழி கொடுக்க, அனுமார் கேட்டு அச்சமென்பதை மண்ணிற்போட்டு ஆரவாரித்து மனது பூரித்து சந்தோஷக்கடலில் புகுந்து சிங்கம் போலத் துள்ளி இலங்கை ராவணனைத் தள்ளி அந்த மயிலிராவணன் சிரசைக் கிள்ளி அவனுதிரத்தைக் கையினலள்ளி தாகந்தீர்ந்து நான் மகிழ்ச்சி கூர்ந்து வருகிறேனென்று சபதங்கூறிப் பகைமீறி சுவாமியைப் பணிந்து குனிந்து வந்தனையோடு சிந்தனை செய்து கந்தபுஷ்பங்கள் காலிற்பெயது அஞ்சலிசெய்து வண ங்கி யொதுங்கி பதுங்கி ஆடி பாட்டுகள் பாடி பூமலர் சூடி கடவுளை நாடி அவர் திருவருள் தேடி அன்போடு ஓடிவந்து நின்ருர்.

அப்போது விபீஷணர் சுக்ரீவா சாம்புவர் இந்த மூன்றுபேரும் அனுமாரைப் பார்த்து ஒரு விசேஷஞ் சொல்லுகிருர்கள். நீர் மகா பராக்கிரமசாலியல்லவோ? உமக்கு ஈடு ஜோடு ஒருவருமில்லை. நீர் ஆகாயம பூமி பாதாளத்திற்கு மொன்ருய் சரீரமெடுக்க வேண்டுமென் ருலு மெடுப்பீர்; நீர் மகாபுருஷசிங்கம்; நாங்களென்ன சொல்லப்போகிருேம். இன்றிராத்திரிக்கு மாத்திரம் உம்முடைய வாலினுலே இந்த எழுபதுவெள்ளஞ் சேனைகளுக்கும் கோட்டையிட்டுக்கொண்டிருந்து மகா ஜாக்கிரதையாகக் கார்க்கவேண்டுமென்று அவர் சொன் னமாத்திரத்தில், அந்த அனுமாரானவர் கேட்டு மகிழ் ந்து புகழ்ந்து அப்படியே யாகட்டுமென்று சொன்னுர். அப்படியிருக்கிற சமயத்தில் சூரியன் அஸ்தமனமாயி ஞர். உடனே அனுமாரானவர் எழுபதுவெள்ளஞ் சேனைகளையுஞ் ஒன்ருகச் சேர்த்து தம்முடைய வாலி னுலே கோட்டையிட்டார். அக்கோட்டையானது எப் படியிருந்ததென்ருல்: ஆகாயம் பூமி பாதாளத்துக்கு மூடுருவத்தக்கதா யிருந்தது. அக்கோட்டை வாசல் எங்கேயென்ருல், அனுமானுடைய வாயிலே புகுந்து செவியிலே புறப்படவேண்டும். மற்றபடி வாசலுமில்லை, வழியுமில்லை, ஈ எறும்பு நுழையப்போகாது. அப்படி நுழையவேண்டுமென்ருலும் இடமில்லை. வாலுடனே வால் நெருக்கமாகவும் கோட்டையிட்டுக்கொண்டு உள்ளே இராமலட்சுமண ளிரண்டுபேரும் ஓர் பர்னக

சாலையில் சயனித்துக் கொண்டிருந்தார்கள். அத்தரு ணத்தில் விபீஷணருஞ் சுக்ரீவரும் யோசனைசெய்து இன்றிரவில் நாலுஜாமம் மகாஜாக்கிரதையாக யிருக்க வேண்டுமென்று சொல்லி, அங்கதனை யழைத்து அவ னோடுகூட இலட்சுமணரையுங் கூட்டி விருதுமணிகளை யாட்டி சந்தடிகளைக் காட்டி சிங்கநாதங்களை மீட்டி நித் திரை என்பதை யோட்டி பற்பல வாத்தியங்கள் முழங்க வும தர்மதானம் வழங்கவும் வேசியர்களாடவும் வித்து வான்கள் பாடவும் இப்படி நானுவித வேடிக்கையோடு மகாஜாக்கிரதையாய் விழித்திருக்கும்படியாகக் கட்டளை யிட்டு இந்தக் காரியத்தி லாராவது அசட்டையாக யிருந் தால் நம்முடைய ஆக்கினை தெரியுமோவென்று சொல் லிக் கட்டுதிட்டஞ் செய்து நளனையழைத்து அவனுக் கும் அவ்வாறே கட்டளையிட்டருளி, சுக்ரீவன் நீலன் இவர்களையும் அழைப்பித்து தண்டம் வில் வேல் வாள் யானை குதிரை ஒட்டகம்முதலிய பலவித ஆயுதங்களையும் கொடுத்து இன்றிரவில் தென்றிசைப் புறத்தில் பதன மாகக் காருங்களென்று கட்டளையிட்டருளி, வீரனுன குமுதனை யழைத்து அவனுக்குத் துணைக்கருவியாக இரண்டுலட்சம் வானர சேனைகளைக் கூட்டி சிறிது வாத் தியங்களைக் கொடுத்து, அப்பா! நீ மேற்குதிசைப்புறத் திலே இரவில் நாலுசாமமும் ஜாக்கிரதையாகக் காருங்க ளென்று ஆக்கினையோடு தாக்கீதுசெய்து, சாம்புவந் தனை யழைத்து, அப்பா! நீ வடக்குத் திசைப்புறத்தில் பதனமாகக் காருமென்று சட்டமோடு திட்டஞ் செய்து, கிழக்குத்திசைப் புறத்திலும் அவ்வாறே ஆவலோடு காவலாளிகளைச் சேவகஞ் செய்ய திட்டமோடு கட்டளை யிட்டருளி, அங்கதன் நீலன் குமதன் சாம்பன் இந்த நாலுபேரும் அவரவர் திசைபுறத்திலே ஜாக்கிரதையாகக் கார்க்கிற சமயத்தில் விபீஷணரானவர் அவரவர்க்கு எச் சரிக்கை சொல்லிக்கொண்டு அந்தக் கோட்டையைச் சுற் றிக்கொண்டுவந்தார். இப்படியிருக்கிறசமயத்திலே அன் றிரவில் பதினைந்து நாழிகையாச்சுது. இனிமேல் மயிலி ராவணன் கதையைக் கூறுகிறேனென்று நாரதர் சொல் லுகிருர். கேளுமையா கௌதமரிஷியே! இப்படியாக இவர்களிருக்கிறகாலத்தில், பாதாள இலங்கையையாளு கிற மயிலிராவணன் அன்று இராத்திரி பதினைந்து

நாழிகையில் ஆலோசனைகள் செய்து தன்னுடைய அஞ்சனஸ்திரத்தை நெஞ்சிலே நினைத்து பிராமணரை யழைத்து சாஸ்திரங் கேட்டு தன் மனதில் சித்தனுகிய மந்திரிகளை யழைத்து கெட்டிக்காரராக நான்குபேரை நியமித்தான். அவர்கள் யாரென்றால் சதுரனென்றும், சாயித்தியனென்றும், சகலப்பிரவாணரென்றும், மாயா விநோதியென்றும், நான்குபேரை யுடையவர்கள். இந்நான்குபேரையுங் கூட்டிக்கொண்டு புறப்பட்டான். அப்போது அவன் பத்தினியாகிய வானமாலிகை தன்னுடைய புருஷனுகிய மயிலிராவணன் கையைப் பிடித்துக்கொண்டு ஒரு விசேஷஞ் சொல்லுகிருள்: வாருமையா என் பிராணநாதா! நீரித்தனை சேனையுடன் எங்கேபயணமென்று கேட்க, மயிலிராவணன் சொல்லுகிருன்: கேளும் பெண்ணே வர்னமாலியே! இலங்கையிலே இராமலட்சுமணுள் இரண்டு மனிதர்கள் வந்து எழுபது வெள்ளஞ் சேனையுடனே நமது தமையனுகிய இராவணேஸ்வரனுடைய தம்பி கும்பகர்ணனையும், குமாரவர்க்கங்களையும், சகல இராட்சதாளையும் அதம் பண்ணிப் போட்டார்கள். அப்படிப்பட்ட மனிதர்களை காளிக்குப் பலிகொடுக்கிறேனென்று சபதங் கூறிவந்தேன். அந்தச் சபதம் தப்பாமல் அவர்கள் இரண்டு பேரையும் கொண்டுவரப்போகிறேனென்று கூற, இதுகளைக் கேட்ட வானமாலி சொல்லுகிருள்: வாருமையா சுவாமி பிராணநாதா! நானொரு விசேஷஞ் சொல்லுகிறேன் கேளும். அந்த இராமலட்சுமணுள் இரண்டு பேரையும் மனிதரென்று எண்ணவேண்டாம். சாட்சாத் வைகுண்டவாசியாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவென்று எண்ணிகொள்ளும். அவர்களை ஒருவராலுஞ் செயிக்கமுடியாது. இராவணனுக்குக் கெட்டுப்போக காலம் வந்தபடியால் சீதையென்கிற அக்கினியைக் கொண்டுவந்து சிறையில் வைத்திருக்கிருன். இலங்கைக்கு அனர்த்தம தேடிக்கொண்டான். அவர்கள் புத்திர மித்திரர்களையுங் கொன்றுபோட்டுத் தானும் சாகவேண்டுமென்று திரிகிருன். அவனும் ஜெயிக்கப்போகிறதில்லை. விபீஷணரானவர் தன் தமையனுகிய இராவணனுக்குச் சொல்லத்தகுந்த புத்தியெல்லாஞ் சொன்னுர். சொன்ன விடத்திலே அவன் தம்பி புத்தியைக் கேளாதபடியினுல் இப்

படிக்கெல்லாமாயிற்று. அவர் நல்ல புத்திமானானபடி யால் நாமிங்கே யிருந்தால் அதமாய்ப்போவோமென்று கருதி அந்த ராமசுவாமியைச் சரணமென்றடைந்தார். அவருக்கு இலங்கை ராஜ்ஜியத்தைப் பட்டாபிஷேகஞ் செய்யப்போகிறார். சுவாமி! நீரும் போனால் உம்மை யும் மேன்மையாய்ப் பூபோல் வைத்துக்கொண்டிருப் பார். அடியாள் சொல்லுகிற காரியத்திற்கு விரோதமாகப் போனால் உம்முடைய காரியம் யாவும் விபரீதமாகும். என்னையனே! என்னுயிர்த்துணைவா! நீர் இங்கேதானே யிருந்தால் பாதாளலங்கையை ஆண்டு சுகமாயிருக்க லாம். அங்கே போகிறது சரியான நியாயமல்லவென்று அநேக நல்ல மார்க்கங்கூறி அவனது இருகையையும் பிடித்துக்கொண்டு அந்தப்புரம் போவோமென்று பல வாறாகத் தடுத்து நற்புத்தியை யெடுத்துப் பன்முறையும் கூறினள். இவளது வார்த்தையைக் கேட்டு அந்தக் கொடும்பாவியாகிய மயிலிராவணன் சீறி கோபமீறி பதி விரதா சிரோமணியாகிய வர்ணமாலிகை சொல்லைத் தள் ளிப்போவதே உத்தமமென்று துள்ளிவிழுந்து எழுந்து மந்திரிகளைக் கூட்டி சேனைகளை யோட்டி, விருதுவண் களை யாட்டி, சவுரியங்களைக் காட்டி நடந்தான்.

வர்ணமாலிகை மறுபடியும் புருஷனைப் பார்த்து தேகம் வியர்த்து சுவாமி! நான் வருமதிசொன்னேன்; நீர் படுந்துன்பத்தைப் படுமென்று கூறி, அவள் புத்தி மாறி அவரைத் தூறி அந்தப்புறம்வீறி பஞ்சணையேறி வீற்றிருந்தாள். மயிலிராவணன் கரி பரி முதலிய சேனாதி பதிகளை யழைத்துக்கொண்டு தன்னுடைய அரண்மனை விட்டு ஆயுதங்களைத் தொட்டு வாசல் கடந்து நடந்து அக்கினிக் கோட்டைக்கு வந்து யோசனை செய்து அவ் விடம் விட்டு மேல்சமுத்திரக்கரை வெளியே ஓரிடத்தில் வந்திருந்து தனது நாலு மந்திரிகளைப் பார்த்து ஒரு விசேஷஞ் சொல்லுகிறான். மந்திரிகளே! இனிமேல் இராமலட்சுமணனிருவரையும் யாவர்பிடித்துக்கொண்டு வருவீர்களென்று வினவ, சதுரனென்னும் மந்திரி யெழுந்து காலில் விழுந்து பணிந்து மயிலிராவணனைக் கண்டு அஞ்சலிசெய்து சொல்லுகிறான்: வாருமையா சுவாமி! என்னை அனுப்பினால் அந்த எழுபதுவெள் ளஞ் சேனைகளையுங் கொன்று வென்று அங்கே நின்று

தின்று வருகிறேன். அவர்கள் இரண்டுபேரையுங் கொண்டுவரச்சொன்னாலுங் கொண்டுவருகிறேன் என்று மறுபடியுஞ் சொன்னான். இவ்வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திலே மயிலிராவணன் சதுரனுக்குச் சகல வெகுமதிசெய்து பாக்குவெற்றிலை கொடுத்து சீக்கிரத்திலே அனுகூலஞ் செய்து வாருமென்று அனுப்பி வைத்தான். அந்தச் சதுரன் விடை பெற்றுக்கொண்டு தாமரைத் தண்டினது வழியாகவந்து இராமரிட சேனைகளெல்லா மிருக்குமிட மெங்கே யென்று வெகு துரிதமாகப் பார்த்துக்கொண்டுவந்து அனுமார் கோட்டையிலிருக்கிறதைக்கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டு, இப்படிப்பட்ட கோட்டையை எந்தராஜ்ஜியத்திலும் கண்டதில்லையென்று நினைத்து நாலுமூலையுஞ் சுற்றிப் பார்த்தான். கோட்டை வாசல் எங்கே யென்றால் அனுமாருடைய வாயில்புகுந்து செவியிலேபுறப்படவேண்டும். அதுவேயொழிய வேறே எங்கும் வழியுமில்லை வாசலுமில்லை. கோட்டையானது ஆகாயம் பூமி பாதாளம் ஒன்றாயிருக்கிறது. ஒருவராலேயும் உள்ளே போகமுடியாது. கோட்டையிலே யிருக்கிறபேர் வெகு ஜாக்கிரதையாயிருக்கிறார்கள். ஆனபடியினாலே நம்மாலேயுங் கோட்டைக்குள் நுழைய முடியாதென்று நினைத்து சதுரனானவன் திரும்பிப்போய் மயிலிராவணனைக்கண்டு தலையைக் குனிந்துக் கொண்டுநின்றான். அப்போது மயிலிராவணன் சதுரனைப்பார்த்து வாரும்பிள்ளாய் சதுரா! நீஇங்கேயிருந்து போகச்சே சொன்னதீரமென்ன? இப்போது தலையைக் குனிந்துநிற்கும் வீரமென்ன? என்று கேட்க, சதுரன் சொல்லுகிறான்: வாருமையாசுவாமி! நாம் நினைத்தகாரியம் ஆகிறதில்லை, திரும்பிப்போவதே பெரிய காரியம். அது எப்படியென்றால், அனுமாரானவர் தம்முடைய வாலினாலேகோட்டையிட்டுக்கொண்டிருக்கிறார். அந்தக் கோட்டைக்குள் நுழைய வாசற்படி எங்குங் காணோம். ஆகாயம் பூமி பாதாளத்துக்கும் ஒன்றாயிருக்கிறது. கோட்டைக்குள் இருக்கிறபேர்கள் வெகு ஜாக்கிரதையாயிருக்கிறார்கள். நம்மாலே முடியாதென்று சதுரனானவன் சொன்னமாத்திரத்திலே சாயித்தியனெழுந்து மயிலிராவணன் காலில் விழுந்து சாஷ்டாங்கமாகத் தெண்டஞ் சமர்ப்பித்து நமஸ்கரித்து சதுரனானவன் உலக

மெல்லாம் தன்னைப்போல் எண்ணுவான், அவனாலே ஆகாவிட்டாலும் என்னாலாகும். சுவாமி! என்னையனுப்பினால் அந்தக் குரங்கு வாலாலே யிட்டிருக்கிற கோட்டையை நான் என் காலினால் உதைத்துத் தள்ளிப் போட்டு அந்த எழுபது வெள்ளஞ் சேனைகளையும் ராம லட்சுமணர் இருவரையும் சங்கரிக்கச் சொன்னாலுஞ் சரியே; அல்லது அவ்விருவரையும் மகா விநோதமான பெட்டியிலே போட்டுக்கொண்டுவரச்சொன்னாலும் வருகிறேன்; சீக்கிரம் அடியேனுக்கு விடை கொடுமென்று கேட்டான்.

அப்படிக் கேட்ட மந்திரியைப் பார்த்து மயிலிராவணன் அதிக சந்தோஷப்பட்டு அவனுக்கு வெகு மதிகளைச் செய்து அனுப்பினான். சாயித்தியனானவன் விடைபெற்றுக்கொண்டு ஸ்ரீராமருடைய பாளையத்தில் அனுமார் கோட்டை யிட்டுக்கொண்டிருக்கிறதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு பிரமித்துநின்று நாமென்ன சபதஞ் செய்துவந்தோம்; இதைப் பார்த்தால் வெகு கடினமாயிருக்கிறது. சதுரனைப்போல் நாம் சும்மாயிராமல் அநேக சபதங்களைச்செய்து வெகுமதியும் பெற்றுவந்தோம். இப்போது திரும்பிப்போனால் நம்மைப் பரிகாசஞ் செய்வார்கள். அதைவிட செத்தாலும் நல்லதென யோசனைசெய்து இக்கோட்டைக்கு வழியுமில்லை வாசலுமில்லை; இதற்கென்ன செய்யலாமென்று எண்ணி ஆலோசனைபண்ணி பட்சிரூப மெடுத்துவந்து ஆகாயத்திலே பறந்து இக்கோட்டைக்குட்போய் ராம லட்சுமணர் இருவரையும் எடுத்துக்கொண்டு போவோம் என்று நிச்சயம்பண்ணி, பட்சிரூபமெடுத்து ஆகாயத்திலேபறந்து வாயுமண்டலம்சூரியமண்டலம் சந்திரமண்டலம் நட்சத்திரமண்டலம் நால்வகை மண்டலத்திலும் பறந்து பார்த்தான். அவ்வளவிலேயும் வாலானது அப்புறம் ஊடுருவிப்போயிருப்பதைக்கண்டு அதிக விசாரங் கொண்டு இப்படியுமாகாதென்று பூமியிலேயிறங்கி தன் சுயரூபமெடுத்து அக்கோட்டைக்குள் போகவேண்டுமென்று மெள்ள வாலைக் கிளப்பி தலையை உள்ளே நுழையவிட்ட மாத்திரத்தில் அனுமாருக்கு வாலசைவு கொடுத்துநிற்க, அனுமாரானவர் என்னமோவென்று வாலைக் கெட்டியாக நெருக்கினார். வலுவாய் நெருக்கின

மாத்திரத்தில் அவனது தலை உள்ளேயும், உடல் வெளியிலேயுமாக நசுங்கி தேய்ந்து நொருங்கி ஜீவன் போகத் தக்கதாகக் கடினமாயிற்று. அப்போது தலையைக் கெட்டியாக யிழுத்தான். இழுத்கமாத்திரத்தில் வால் நெருங்கினதால் முகம் மூக்கு நாக்கு கண் இவைகளெல்லாம் நசுங்கிதேய்ந்துபோய் ரத்தவெள்ளமெடுத்துக்கொண்டு தலைவெளியில்வந்ததும் மூர்ச்சையடைந்துசற்றுநேரஞ் சென்றபின்பு மூர்ச்சைதெளிந்தெழுந்து தலையைக் குனிந்துகொண்டு ஓடிவந்து மயிலிராவணன்முன் நின்ருன்.

அப்படி நின்றவனைப் பார்த்து மயிலிராவணன் திகைத்து நகைத்து, வாரும் பிள்ளாய் மந்திரிசிரோன்மணியே! சாயித்தியனென்னும் நவமணியே! நீ இங்கிருந்து சொல்லிப்போன விசேஷமென்ன? உன்னை இப்படிச் செய்தது யார்? எனக் கேட்க, சாயித்தியன் சொல்லுகிருன்: கேளுமையா சுவாமி! நான் அவர்கள் பாளையத்திற்குப் போய்க் கோட்டையைச் சுற்றிப் பார்த்தேன். அக்கோட்டையானது பூமி பாதாளத்திற்கும் ஒன்ருக யிருந்ததைக்கண்டு ஆலோசித்துப் பட்சிரூபம் எடுத்துப் பறந்து போகிறபோது வாயுமண்டலம் சந்திரமண்டலம் சூரியமண்டலம் நட்சத்திரயண்டலம் வரையிலும் பறந்து பார்த்தேன். வால்கோட்டை அதிக நெருக்கமாய் உயர்ந்திருப்பதைக் கண்டு திரும்பிப் பூமியிலே யிறங்கிப் பெருச்சாளியாக அறுத்துக்கொண்டு போகிறபோது வால் நெருக்கமாகவும் நீண்டிருப்பதையுங்கண்டு மீண்டு மெதுவாக வாலைக்கிளப்பித் தலையை உள்ளே போகவிட்டேன். அந்த அனுமானுக்கு வால் அசைவு கொடுத்தபடியால் வாலை நெருக்கினுர். என்னுடைய தலை உள்ளேயும் உடல் வெளியிலேயுமாய்த் தேய்ந்து ஜீவன் போவதாய்ப் பிராணனுக் கபாயம் வருவது கண்டு தலையை யிழுத்துக்கொண்டேன். இழுக்கிறபோது முகம் மூக்கு முதலானவைகள் நசுங்கிபோய் பிராணன் பிழைத்து வநதேன். நான் சதுரன் சொன்னதைக் கேட்டு நாம் பரிகாசஞ் செய்தோமே. அந்த அனுமார் மஹா பராக்கிரமசாலி. அவரை ஜெயிப்பது அரிது. அப்புறம்உமதுசித்தத்துக்குத்தகுநதயுக்திப்படி செய்யுமென்று மெத்தவும் வேண்டி சதுரனைத்தாண்டி தனது காவலில் ஆவலோடு சேவகஞ் செய்திருந்தான்.

அப்பால் மயிலிராவணன் சாயித்தியன் போன பின்பு மந்திரிகளைப் பார்த்து வாருங்கள் மந்திரிகளே! நான் போய்வருகிறேன். உங்கள் கையாலாகாமற் போச்சுதே. நீங்கள் இங்கேதானே நான் வருகிறபரியந்தம் பத்திரமா யிருங்களென்று சொல்லிவிட்டு, மயிலிராவணனவன் விபீஷணரைப்போல ரூபமெடுத்துக்கொண்டு மிகுந்த கோபாவேசத்துடன் பாதாளயிலங்கையைவிட்டுத் தாமரைத்தண்டின் வழியாக வெளியில்வந்து சீக்கிரம் இராமலட்சுமணு ளெங்கேயென்று வந்துபார்க்க, அனுமார் வாலினால் கோட்டை கட்டிக்கொண்டு இருப்பதைக்கண்டு எங்கு முள்ளேபோக வழியில்லாமல் ஒரு தந்திரத்தை யோசித்து அனுமாரருகில் வந்து அனுமாரே! எச்சரிக்கையென்றுசொல்லி கோட்டைக்குள்ளே எச்சரிக்கையாய் இருக்கிறார்களா? நான் போய் பார்க்க வேண்டுமென்று சொல்ல, அனுமார் மெய்யென்று நம்பி வாயைத் திறந்தமாத்திரத்தில் மயிலிராவணன் அனுமாருடைய வாயிலே புகுந்து செவியிலே புறப்பட்டு கோட்டைக்குள்ளேபோய் இராமலட்சுமணுள் படுத்துக்கொண்டிருக்கும் இடத்தைத்தேடி மெதுவாக மாயாவினோதம் பண்ணி இரண்டுபேரையுமெடுத்து ஒரு பெட்டியிலேபோட்டு கெட்டியாகக் கட்டி எடுத்துக் கொண்டு வந்து ஒருவார்த்தை சொல்லுகிறான். ஓ அனுமாரே! நாழிகை பதினைந்து ஆயிற்று. இன்னம் பதினைந்து நாழிகையிருக்கிறது எச்சரிக்கையாயிரும். நான் மயிலிராவணன் வருகிற கள்ளவழியெல்லாம பார்த்து வருகிறேன். மயிலிராவணன் என்னைப்போலும் ரூபம் எடுத்துக்கொண்டு வருவான். இதுகளையெல்லாம் நன்றாக ஆராய்ந்து பார்த்திருமென்று விபீஷணரைப் போல் அவ்வாயிலே புகுந்து செவியிலே வந்துவிட்டான். மயிலிராவணன் பின்னும் தன்னுடைய மந்திரிகளிருக்கிறவிடத்திலே போய் அழைத்துக்கொண்டு தன் இலங்கையில் பெட்டியைக் கொண்டுபோய் வைத்து இராட்சதர்களையும் காவல் வைத்துவிட்டுத் திருப்பிப் போனான்.

அந்தச்சமயத்தில் ஆகாயவாணி பார்த்துசொல்லுகிறாள்: அடா வாடா மயிலிராவணா! இந்தபட்டுந்தான் உனக்குப் பட்டம் பொறுக்கும்; இனி பட்டம் பொறுக்

காது. இந்தப் பெட்டியிலிருக்கிற சாட்சாத் வைகுண்ட நாயகராகிய இராமலட்சுமணுளை எடுத்துக்கொண்டு வந்தாயே; அதனாலே உனக்கு அழிவுகாலம் வந்துவிட்டது. அனுமாரானவர் வந்து பட்டணமெல்லாஞ் சுட்டுக் கோட்டையைக் கொளுத்தி ராக்ஷதர்களையும்வென்று உன்னுடற்பிறந்தாளாகிய தூரதண்டிகை பிள்ளையாகிய சித்திரசேனனுக்குப் பட்டங்கட்டிவிட்டு இராமலட்சுமணுளை எடுத்துக்கொண்டு போவாரென்று ஆகாயவாணி பலமுறை நற்புத்தி எடுத்துக் கூறினாள். அந்த மகா பாவியான மயிலிராவணன் காதிலே நாராசங் காய்ச்சி விட்டதுபோலும், ஈரமாக்கிலே வயிரவாணி கடாவினாற்போலும் ஏறிற்று. மயிலிராவணன் பயந்து நயந்து நடுநடுங்கி ஒடுங்கி அயர்ந்து வியர்த்து நாணி மனநடுங்கி உடனே தூரதண்டிகையையும் சித்திரசேனனையும் பிடித்துக்கட்டி கால்விலங்கு தாள்விலங்கு மார்விலங்கு இவைகளைப் பூட்டி ஒரு குகையிலே மாட்டி அடைத்துத் தன்னுடைய அரண்மனையிலே இந்திரபோகத்திலே போனான்.

அங்கே விபீஷணரானவர் வால்கோட்டையிலே அவரவர்களுக்கு எச்சரிக்கை கூறிவரும்போது அனுமார் சொல்லுகிறார். ஏன் விபீஷணரே! அரைநாழிகைக்கு முன்னேவந்து என்னைப்போல் உருவமெடுத்து வருவானென்றும் சொல்லிவிட்டுப் போனீரே? நான் அவன் வருகிற கள்ளவழியைப் பார்த்து வருகிறேனென்று என்னை யறியாமல் கோட்டைக்கு எப்படி வந்தீர்? மறுபடியும் மனது கசிந்து நசிந்து வருகிறது என்னவென்று அனுமார் கேட்டார். இதை விபீஷணர் கேட்டு இடிவிழுந்த மரம்போற் சாய்ந்து எரிந்து பொரிந்து சரிந்த குடலும் சரிந்து எடுத்துக்கொண்டு போய்விட்டானென்று தெரிந்து அறிந்து பழுமரம்போலும் முறிந்து விழுந்து எழுந்து வாதித்து மனம் பேதித்து தியங்கி மயங்கி அஞ்சி அனுமாரைக் கெஞ்சி விசாரம் மிஞ்சி, ஐயையோ கெடுத்தீரே! வீண்பேரெடுத்தீரே! என்று கூற, அனுமார் கனிந்து முனிந்து அகம்வெறுத்து முகங்கறுத்து க்ஷணப்பொழுதிலே மூர்ச்சையடைந்தார். மூர்ச்சைதெளிந்து விபீஷணரைப் பார்த்து நீர் சொன்னது பொய்யல்ல, மெய்யே. எனக்கு மதிமயங்கி

ஒன்றுந் தெரியாமற்போயிற்று. இதற்கென்னசெய்வோ மென்று கேட்க விபீஷணர் சொலலுகிருர்.

வாருமையா அநுமாரே! நான் என் தமையனுகிய இராவணனைப் பகைத்துக்கொண்டு வழிபடுகடவுளாகிய இராமசுவாமியைச் சரணமென்று அடைந்தேன். அப்படிப்பட்ட சுவாமியையும் மயிலிராவணன் கையில் ஒப்பித்துவிட்டேன். என்னைப்போ லொருபாவி இவ்வுலகிலுண்டோ வென்று பலவாறு அழுது கடவுளைத் தொழுது துயரப்பட, அநுமாா மனங் கலங்கி துயரங் கொண்டு சொல்லுகிருர்: கேளும் விபீஷணரே! நமது சுவாமி படுத்துக்கொண்டிருக்கிற விடத்திலே பார்க்க அவ்விடத்திலேசுவாமியைக்காணுதபடியினுலே விபீஷணர் கூறுகின்ருர்: இப்போது விடிந்தால் சுக்ரீவர்வருவாரே; சுவாமி எங்கேயென்று கேட்பாரே; அவருக்கென்ன சொல்லுகிறது. இத்தனைபேரு மிருந்து சுவாமியை ஒப்புவித்துவிடலாமோ என்று வருந்துவாரே; ஆக்கினை செய்வாரே; எழுபதுவெள்ளஞ் சேனையு மவரவரிருப்பிடம் போய்விடுவாரே; நான் சுவாமியை நம்பி வந்தேனல்லவா; நானெங்கே போவேன்; எனக்கொரு விடமுமில்லையே; அனுதிபட்சிபோ லானேனே; அபகீர்த்தியுமாயிற்றே; தீவிரம் போயிற்றே; சுவாமியை எந்தக்காலத்தில் காண்பேனென்று வெகுவாய் விசாரப்படுகிறபோது அநுமாா ஒரு விசேஷஞ் சொல்லுகிருர்: ஐயா விபீஷணரே! மயிலிராவணனும உம்மைப்போல் உருவமெடுத்து வந்தது தெரியாமற் போயிற்றே. இப்படிச் செய்வானென்று தெரிந்தேனுகில் மகா ஜாக்கிரதையாக யிருப்பேன். அப்படிப்பட்ட துன்மார்க்கனைக் கொன்றுவிட்டு இராமலட்சுமணு ளிரண்டுபேரையும் எடுத்துக்கொண்டு வருகிறேன; நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். அந்தப்பாதாளலங்கைக்குப் போகிற வழி எப்படியென்று கேட்க, விபீஷணர் சொல்லுகிருர்: கேளுமையா பாதாளலங்கைக்கு நீராவது போவதேது. பாதாள லங்கையோ வெகு கடினம்: ஒருவராலேயும் ஆகாது. அதெப்படியெனருல் நடுச்சமுத்திரத்திலே பெரிய கடற்ருமரை படர்ந்திருக்கும். அதிலொரு தாமரைத் தண்டும் ஒருபுட்பமும் பெரிதாயுமிருக்கிறது, அத்துவாரத்தில் சரீரத்தை ஒடுக்கி நுட்பமான புகையைப்

போல் போகவேண்டும். அப்படிப்போனால் அங்ஙனம் பாதாள லங்கை அக்கினிக்கோட்டையோடு தோன்றும். அக்கோட்டையின் சிகரத்தில் மச்சகற்பனென்று ஒரு ராட்சதனுண்டு. அவன் மகா பராக்கிரமசாலி அவனை ஒருவராலேயுஞ் ஜெயிக்க முடியாது. அவனோடுகூட இரண்டாயிரம் லட்சம் இராட்சகர்களுண்டு. ஒருவரைப் பார்க்கிலும் ஒருவர் பராக்கிரமசாலிகள். அங்ஙனம் விட்டு மற்றொரு பக்கத்திலே போனால் அங்கொரு கற்பகத் திருக்குளம் ஒன்றுண்டு. அத்திருக்குளத்திலே அப்பட்டணத்திலுள்ள ஜனங்களும் சகல இராட்சத ஜனங்களும் வந்து தண்ணீர் முகர்வதும் பூஜை செய்வதும் குளத்தண்ணீர் எடுத்துக்கொண்டு போகிறபோது கோட்டை வாசலிலிருக்கிறபேர் தண்ணீர் முதலானதும் துலாபாரத்தில் வைத்து நிறுத்திச் சோதித்துக் கொள்ளுவார்கள். அதிலே யாதாமொரு அத்தாட்சி காணப்படுவாராயின் ஆக்கினையோடு தாக்கீது செய்வார்கள். அபபடிப்பட்ட கட்டுங்காவலுமாயிருக்கும். அப்புறம் போகையில் அந்தப் பட்டணம் மாட மாளிகை கூட கோபுரம் அரண்மனையோடு தோன்றும். பாதாளலங்கையின் பெருமையும் அருமையும் மூவராலும் சொல்லப்படாதென்று விபீஷணர் கூற, அனுமார் கேட்டு இனிமேல் அரைட்சணமிருக்கிறதில்லை. நாம் வழிபடுதெய்வமாகிய இராமலட்சுமண ளிரண்டுபேரையும் எடுத்துக் கொண்டுவராவிட்டால் பாதாளலங்கையிலே என்சீவனை விட்டுவிடுகிறேன். இனி ஒருவருக்கும் என் முகத்தைக் காட்டுகிறதில்லையென்று புறப்பட்டார். மறுபடியும் விபீஷணர் சொல்லுகிறார்.

வாருமையா அனுமாரே! எந்தவிதத்திலே போய் வரவேண்டுமோ அந்தவிதத்திலே போய்வாரும், நீர் ஜெயமாய் வந்தாலாச்சுது, இல்லாவிட்டால் இவ்விடத்திலேதானே 'பிராணத்தியாகஞ்செய்'துகொள்ளுகிறேன், இது நிச்சயமாக வெண்ணிக்கொள்ளும், இராமசுவாமி கிருபையினாலே நீர் ஜெயமாய் வருவீர், சீக்கிரத்தில் நமது காரியத்தை ஜெயஞ்செய்து வாருமென்று விடை கொடுத்தார். அனுமார் பாதாளயிலங்கைக்குப் புறப்பட்டுவருகிறபோது நடுசமூத்திரத்தில் தாமரை விசேஷமாய்ப் படர்ந்திருந்தன. அதில் 21,000 இராட்சதாள்

காவலிருக்கிறார்கள். அவர்களையெல்லாம் க்ஷணநேரத்திற் கொன்று அதிலிருந்து ஓர் பெரிய புட்பத்தின் தண்டில் தன் சரீரத்தை யொடுக்கி புகைபோல் புகுந்து பாதாளலங்கைக்குப்போனார். போகிறபோது அக்கினிக் கோட்டையைக் கண்டார். அதனருகே போகின்றபோது அப்பட்டணத்தி லுள்ளவர்கள் அனுமாரைக் கண்டு சொல்லுகிறார்கள். அதற்குள்ளே அனுமாருங் கிட்டேவந்தார். ஜனங்கள் பார்த்து அந்தக் குரங்கைப் பிடிக்கவேணுமென்று நாலுபுறமும் வந்து வளைத்துக் கொண்டார்கள். அப்படி வளைத்துக்கொண்டதை அனுமார் பார்த்து சற்றும் அஞ்சாமல் உடனே தமதுவிஸ்வரூபத்தை யெடுத்து ராட்சதரைத் தடுத்து வாலாலே வளைத்துச்சுற்றி நிலத்திலே உதைத்து குரங்கைப் போல் முளைத்து விஸ்வரூபம் கிளைத்து அடியடியென்றடித்து இடி இடியென் றிடித்து புடைத்து வாலைத் துடைத்துத் தள்ளி இராட்சதர் தலையைக்கிள்ளி இரத்த நீரை யள்ளி அருந்தி, மனம் வருந்தி வீரம் பொருந்தி நிற்க, மற்றும் இராட்சதர் வந்து எதிர்க்க, அவர்களையும் அவ்வாறு கால்மாடு தலைமாடுகளாகப் பிடித்து அடித்து மீசை துடித்துப் பற்களை நெறநெறவென்று கடித்து யுத்தஞ் செய்கிறபோது மச்சவல்லபன் கேட்டு மனம் பதைத்து அநேக இராட்சதக் கூட்டமுந் தானுமாக அனுமாரிடத்தில் வந்து நிறைந்து சண்டைக்கு முனைந்து வீரமணிகளை யாட்டி சவுரியங்களைக் காட்டி வானராதிகளை மாட்டி அரக்கர் கூட்டங்களை நாட்டி சிங்கநாதங்களை மீட்டி வெற்றி வெற்றியென்று விருது படைகளைக் காட்டி யுத்த ஆயுதமணிந்து சித்தமாகத் துணிந்து நோக்கி அனுமாரோடு தாக்கி தோற்பு யென்பதை நீக்கி வெற்றியென்பதையாக்கி மகாவீரனாகவும் அனுமாரைக் கொல்லவும் அதிக மெதுவாகவந்து எதிர்த்தான். அனுமாரும் மச்சவல்லபனும் ஒருவருக்கொருவர் தாக்கி சண்டைகளாக்கி அவர் மெரிக்க இவர் அடிக்க மச்சவல்லபன் ஆவி துடிக்க சற்றுமிளையாமலுங் களையாமலுந் தேகம் பதைக்கவும் இராட்சதனுடல் சிதைக்கவும் அனுமார் பதைக்கவும் பூமியில் தள்ளி உதைக்கவும் இராட்சதன் கோபமீறி அனுமாரைத்தூறி பாம்பைப்போல் சீறி சிங்கம்போல் வீரி அஞ்சாமலும்

வீரதீரஞ் துஞ்சாமலும் அவரோடுகூட சரிசமானமாக சண்டைசெய்து வந்தான். அனுமாருக்குக் கைகாலசைந்து தோல்வி அடைந்தார். அப்படி தோல்வியையடைந்த அனுமார் ஆலோசித்து ஒருவார்த்தைசொல்லுகிறார். கேளும் பிள்ளாய் நீ யாருடைய குமாரன்? உன் தகப்பன் பேரென்ன? உன் தாய்பேரென்ன? உன்பேரென்ன? அதை எனக்குத் தெரியப்பட ச் சொல்லென்று கேட்க மச்சவல்லபன் கூறுகிறான். அடா வாடா! நீயென்ன கேட்கிறது? நானென்ன சொல்லுகிறது. சண்டைசெய்ய நிபுணன் நீதானோ? சண்டைசெய்யத் திறமில்லாமல் ஜாதிகுலங் கேட்டவனே எழுந்துவா சண்டைசெய்வோம். உன் சமர்த்தும் என் சமர்த்தும் அறிவோம்; சற்றெழுந்திரும் என்று பலவந்தமாக அழைக்க, அனுமார் சொல்லுகிறார். கேளும் பிள்ளாய் இராட்சத சிரோத்த மகாமணியே! உன் குலமும் தலமும் ஜாதியும் நீதியும் கேட்பதென்னவென்று கேட்பாயேயானால் சொல்லுகிறேன்.

· கேளும் பிள்ளாய்! அநேக சீமையிலே யோடி அநேகம்பேருடனே கூடி சண்டைகளாடினேன். சகலரையுஞ் சாடினேன். வெற்றியும் சூடினேன். எனக்கு மிஞ்சின பலசாலிகள் இந்த மூன்றுமண்டலத்திலுமில்லை. அப்படிப்பட்ட மகாசுத்தவீரனாகிய நான் உனக்குத் துஞ்சினேன்; அஞ்சினேன். ஆனபடியினாலே என்னிட ஜீவனுன்கையில் போம்படியாகத் தோன்றுகிறது. அதற்கு முன்னே எல்லாமறிந்து சாவோம், அல்லது திரும்பிப்போவோமென் றெண்ணியும் சொன்னேன். இவ்வளவு பராக்கிரமசாலியாகிய உன்னைப் பெற்ற தாய் யாரோ? அவளைச் சேர்ந்த சுத்தவீர னெத்தனே பராக்கிரமசாலியாக விருப்பானோ? அறியேன். எவ்வளவு தபசுசெய்து பெற்றார்களோ அதையுங் குறியேன். இப்பேர்ப்பட்ட பலத்துடன் கூடி ஒருவரிடத்திலே சேவிப்பானேன். நீ இந்தப் பதினாலுலோகமும் ஜெயிப்பாயே. மயிலிராவணன் இடத்திலே சேவிக்கிற காரணமென்ன? நான் கேட்கிறேனென்று கோபித்துக் கொள்ளவேண்டாம். என்னைச் சண்டைக்கழைக்காதே, உன்னோடே சண்டைசெய்ய எனக்குப் பலமில்லை; நான் தோற்றுப்போனது மெய்யே; என்பேரில் தயவுசெய்யு

மையாவென்று அனுமார் பலமுறையுந்தொழுதார். மச்ச வல்லபன் மனதிரங்கி தஞ்சமென்றவரைக் கொல்லக் கூடாதென்று நெஞ்சில் நினைத்து, கேளும் வானரசிகா மணியே! என் தாய் தகப்பன்பேர் சொல்லுகிறேன். கேட்டபின்பு சண்டைக்கு வாரீரோவென்ன; அப்படியே நல்லதென்று அனுமார் கூற, மச்சவல்லபன் கூறு கிறான். ஐயா வானரோத்தமா! என் தகப்பன் பெய ரென்னவென்றால் அஷ்டதிக்குப் பாலகரை வெல்லு வான்; மும்மூர்த்தியையுங் கொல்லுவான், மகாசமர்த்தன் சுத்தவீரன் சத்துருசம்மாரன் சாவில்லா சிரஞ்சீவிபெற்ற வன் சாக்ஷாத் சிவசங்கற்பமா யிருக்கிறானே அவனென் தகப்பன். அவனது நாமதேயம் அனுமாரென்று சொல்லப்படும். என் தாயார் திமிதியென்னும் மச்சம். என் தகப்பனைப் பெற்றவன் வாயுபகவான். என் பெயர் மச்சவல்லபனென்று சொல்ல, அனுமார் கேட்டு திடுக் கிட்டு மச்சவல்லபனைப் பார்த்து அங்ஙனே யோசித்து ஏதடா என்னைத் தவிர வேறொரு அனுமாருண்டோ இல்லை. நாமொருவன்தானே அனுமார்; இதென்ன விசித்திரமாயிருக்கின்றது. எனக்கு ஸ்திரீகளில்லையே. நாம் நித்திய பிரம்மசாரியாயிற்றே. ஆனால் முன்னம் இலங்கையிலே போய் சீதையைத் தேடி இராவண னுடைய புட்பக விமானத்தில் ஸ்திரீகள் தாறுமாறாய்க் கிடந்தார்களே அவர்களை நாம் பார்த்து சாபல்யப்பட் டோமோ. ஐயையோ! என்னையறியாமல் பிள்ளைவந்த காரணமேது. என்னமோ புதுமையாகத் தோணுது மற்றுங் கேட்டறிவோமென்று கேட்கிறார்.

வாருமப்பா மச்சவல்லபா! என்னமோ அடிக்கடி கேட்கிறானென்று கோபஞ் செய்துக்கொள்ளாதே. என் வாக்கியத்தைத் தள்ளாதே. இன்னமொரு விசேஷங் கேட்கிறேன். என்னவெனில், அனுமாரென்று சொன் னீரே? அவனெங்கே யிருக்கிறவன்? யாரிடத்திலே சேவிக்கின்றான்? சொல்லுமென்று வினவ, மறுபடியும் மச்சவல்லபன் அனுமாரைப் பார்த்துச் சொல்லுகிறான். அடா வாடா வானராதிபதி! என் தகப்பன் ஸ்ரீராமலட்சு மணனுக்குச் சேவகன். அவனுக்குத் துரை சுக்ரீவன். அந்த சுக்ரீவனுக்கு மந்திரி என் தகப்பன். வாலியினாலே ஓட்டப்பட்டு வனாந்திரத்திலேயிருக்க, அப்போது ராம

லட்சுமணனை வணங்கி யழைத்து அதுகளை யாவும் திடப்படுத்தி கிஷ்கிந்தையைப் பட்டங்கட்டின மகானுபாவன். அவரே எனது தகப்பனாரென்று கூற, அனுமார் சந்தோஷித்து இருதயமகிழ்ந்து ஆசையினாலே உன் தாய்தகப்பன்பேர் கேட்டால் இப்படி பரிகாசஞ் செய்யலாமா? பொய் சொல்லலாமா? நானந்த அனுமாரை யறியேனோ? அவ்வனுமார் நித்திய பிர்மசாரி யாயிற்றே. அவருக்கு ஸ்திரீயுண்டோ? பொய் சொல்லாமல் சொல்லென்று வினவ, மச்சவல்லபன் சொல்லுகிறான். வாராய் வானராதிபதியே! என் தகப்பன் அனுமார் இராமலட்சுமணனுடனே சுக்ரீவன் அங்கதன் நீலன் நளன் குமுதன் கேசன் கேசவாட்சன் முதலான பேருடனே சீதையைக் காணாமல் நாலுமூலைக்கும் வானரான அனுப்பும்போது என் தகப்பன் தெற்குப்பாரிசத்திலே சமுத்திரக்கரையிலே யிருந்து சீதை யிலங்கையிலிருக்கிறாளென்று அறிந்து அங்ஙன மிருந்தபடியே ஆகாயத்திலே பறந்து சமுத்திரத்திலே வந்து யோசனை தாண்டி ஓடும்போது அந்தச் சமுத்திரத்தில் வெட்கை யென்கிற இராட்சசி அனுமாருடைய நிழலைக் கண்டு பிடித்து விழுங்க, என் தகப்பனாகிய அனுமார் அந்த இராட்சசி வாயிலே புகுந்து உள்ளே போய் வயிற்றைக் கிழித்துக்கொண்டு போகிறபோது மகா இளைப்பாக உடம்பு வேர்வை வேர்க்க, அந்தவேர்வையைப் பிழிந்து சமுத்திரத்திலே போட, அந்த சமுத்திரத்திலே வாசஞ் செய்கிற பெண் வாயிலே விழுந்து அந்த வேர்வையை மனைவி விழுங்கினவுடனே கர்ப்பந் தரித்து என்னைப் பெற்றாள். அந்தட்சணமே நான் சமுத்திரக்கரையில் குளிர் நடுங்க உட்கார்ந்துக்கொண்டிருந்தேன். இருந்தாற்போலிருந்து ஒரு திவ்விய புருஷன் வந்து என்னை யெடுத்து மடியின்பேரில் வைத்துக்கொண்டு உள்ளங்கால்முதல் உச்சந்தலைவரையில் தடவிக்கொடுத்துஎன்னை முகந்துக்கொடுத்து முத்தியிட்டுக் கொண்டார். அப்போது நான் திவ்விய புருஷரைப்பார்த்து வாருமையா! நீயார்ரையா? என்பேரில்வெகுபிரீதியாக உற்றார்பெற்றார் போல என்னைப் பட்சமோடு எடுத்து முத்தியிட்டுக் கொள்வதென்ன என்று கேட்க, அத்திவ்விய புருஷன் சொல்லுகிறான்: ஓ ஓ குழந்தாய்! நானுனக்கு பாட்ட

னென்று கூறி எனக்குப் பேருமிட்டார். நான் மச்சத்தின் வயிற்றிலே பிறந்தபடியால் மச்சவல்லபனென்று நாமதேயமிட்டார். அப்படியிருக்க நான் பாட்டனுகிய வாயுபகவானைப் பார்த்து, பாட்டா என் தகப்பன் எங்கேயென்று கேட்டேன். அவர் சொன்னதாவது வாரும் குழந்தாய்! உன் தகப்பன்பேர் ஆஞ்சநேயர் அல்லது அனுமாரென்பர். அவா அநேகவரம்பெற்று முப்பத்து முக்கோடிதேவர்களாலும் ஜெயிக்கப்படாதவர்; ஆயிரத்தெட்டு அண்டத்திலேயும் சாவில்லை யென்றுகூற, அப்போது என் தகப்பன் எங்கேயென்று கேட்டேன். வாயு பகவான் சொன்னது அனுமார் சீதையைக்கண்டு பேசி இலங்கையைக் கொளுத்திஞரென்ருர். வாரும் பாட்டா! எனக்கு வரந்தரவேண்டுமென்று கேட்டேன். அவர் சும்மா வரந்தரலாகாதென்றும் நீ என்னைக் குறித்து ஒருநாழிகை தவஞ்செய்தால் நான் தருவேனென்றும் சொல்லினர். அவ்வாறே யான் ஒரு நாழிகை தவஞ் செய்தேன். அதைப்பார்த்து சந்தோஷப்பட்டு என்ன வரம்வேண்டுமென்ருர். எனக்கு வரம் ஒன்ருயிருக்க வேண்டும்; சகல வரம் அதிலே அடங்கி யிருக்கவேண்டும்; என் தகப்பன் பலத்திலும் அதிகமாயிருக்கவேண்டும் என்றேன். அப்படியே வரங்கொடுத்துப்போனுர். இப்படியாக என்னுடைய பூர்வோத்திரம். கேட்டீரோ? இப்போதாகிலுஞ் சண்டைக்கு எழுந்திரென்று சொன்னுர். இந்த வசனங்களையெல்லாம் அனுமார் கேட்டு சந்தோஷித்து நயப்போடு வியப்போடும் மெய்யென்று ஒத்துக்கொண்டு சரீரத்தை அநியாயமாய் மடிக்கப்பார்த்தோம். நமக்குப் புத்திரசிகாமணி கிடைத்தது பாக்கியந்தானென்றெண்ணி யோசனை பண்ணி ஆ ஆ புத்திர சிகாமணியே! நான்தான் அனுமாரென்று சொல்ல மச்சவல்லபனுனவன் உடனே பயந்து நடுநடுங்கி யொடுங்கி அடி பணிந்து தகப்பனென் றெண்ணி நமஸ்காரம் பண்ணி ஆடிப் பாடி ஓடிவந்து காலிலே விழுந்து எழுந்து நிற்க, அனுமான் மச்சவல்லபனை யெடுத்து முத்திகொடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு உச்சியை முகந்து சரீரமெல்லாந் தழுவி, அப்பா குமாரகா! மச்சவல்லபா! நானுன்னை யடித்தேன் பிதுர்த்துரோகியானேனென்று மறுபடியும் சொல்லுகிருர்.

கேளுமப்பா மச்சவல்லபா! நானொரு காரியமாக வந்தேன், எனக்கு அந்தக்காரியஞ் சாதித்து தரவேண்டுமென்ன, மச்சவல்லபன் சொல்லுகிறுன். வாருமையா, நீரென்ன காரியமாக வந்தீர்? நான் அந்தக் காரியத்தை முடித்துக் கொடுக்கிறேன் சொல்லுமென்று வினவ, அனுமாரானவர் சொல்லுகிறுர். கேளுமப்பா மச்சவல்லபா! திசைகண்டராவணனோடு இராம லட்சுமணனும் வானர சேனைகளுங்கூடி சண்டைபண்ணி மூலபலத்தையும் அதஞ்செய்தபின்பு திசைகண்டராவணன் இந்த மயிலிராவணனை அழைத்து இராமலட்சுமணனைக் கொண்டுபோய் உன்னுடைய பாதாள யிலங்கையிலே வைத்துப்போடுமென்றுன். அவ்வாறே மயிலிராவணன் இராத்திரி என்னைவந்து மோசஞ்செய்து இராமலட்சுமணனை எடுத்துக்கொண்டு வந்தான். அதன்பின்பு நான் கோபத்துடனே மயிலிராவணனைச் சங்கரிக்கிறேனென்று பிரதிக்கினை செய்துவந்தேன். அவ்விராமலட்சுமணுள் எங்கே யிருக்கின்றுர்கள் உனக்குத் தெரியுமல்லவா சொல்லுமென்ன மச்சவல்லபன் சொல்லுகிறுன். நான் முன்னம் குழந்தையாக விருக்கிறபோது வாயுபகவான் வரங்கொடுத்துப்போனுர். அப்போது நான் ஒரு யோசனை சொல்லியிருந்தேன். அதாவது இந்தப் பதினுலுலோகமும் ஜெயிக்கவேண்டுமென்று கருதினேன். அப்போது இந்த மயிலிராவணன் வேட்டைமார்க்கமாகப் புறப்பட்டு நானிருக்குமிடத்தில்வந்து என்னுடைய முகத்தையும் பராக்கிரமத்தையுங் கண்டு மகிழ்ச்சிகொண்டு மயிலிராவணன் சாஷ்டாங்கமாகக் காலில் விழுந்து பணிந்து துணிந்து ஒரு வரம் வேண்டும் என்று கேட்டான். நான் அவரைப் பார்த்து சந்தோஷப்பட்டு இப்படிப்பட்ட இராஜாவானவன் சிறு பிள்ளையாகிய என் காலில்விழுந்து கேட்டானென்று மகிழ்ந்து புகழ்ந்து மயிலிராவணனைப்பார்த்து உனக்கு என்ன செய்யவேண்டுமென்று கேட்டேன். மயிலிராவணன் சொன்னது வாருமபிள்ளாய் மச்சவல்லபா! நான் ஆளுகிற பாதாளயிலங்கையைக் காக்க ஒருவருமில்லை, நீயிருந்து காத்துக்கொண்டுவரவேண்டுமென்று அழைத்துவந்து தன்னிடத்தில் வைத்துக்கொண்டான். அது முதல் இதுவரையிலும் நான் காத்துவருகிறேன். இப்

போது எப்படி உம்மை விடுவேன்? நீர் தருமசாஸ்திரம் யாவும் அறிவீரே? உன் மனதுக்குத் தக்கபடி நடவு மையாவென்று வணங்கிச்சொல்ல, அனுமார் மச்சவல் லபனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

கேளும் குமாரகா! ஆனால் செய்யவேண்டிய தென்ன அபஜயப்பட்டால் அந்த அபகீர்த்தி உனக் கில்லையா? உன்னுடையதல்லவா? என்று இவர் பல முறையாகச் சொல்ல, அப்போது மச்சவல்லபன் சொல்லுகிறான். பிதாவே! நான் உயிரோடே யிருந்து மயிலிராவணனுக்குத் துரோகம் பண்ணமாட்டேன்; உமக்கு அந்தரங்கமான வார்த்தைகளைச்சொல்வது தரு மமல்ல. ஆனாலும் உம்முடைய விரதத்தை அறிந்து சொல்லுகிறேன். நீர் வரும்போது தாமரைக்கமலத்தி லே இரண்டாயிரம் ராட்சதர்களிருந்தார்களே; அவரைக் கொன்றழித்துவந்தீரோ? அல்லது சும்மா வந்தீரோ சொல்லுமையாவென்ன அந்த இரண்டாயிரம் ராட்ச தரையுங் கொன்று வந்தேனென்ன மச்சவல்லபன் சொல்லுகிறான்; ஆனால் ஜெயத்தை யடைவீர், நானுன் னைச் சும்மாவிடக்கூடாது ஒருதந்திரஞ்சொல்லுகிறேன். அதென்னவெனில் என்னை நடுமார்பில் குத்துவீராகில் நான் மூர்ச்சையாய் விழுவேன். என்னுயிர் நிலை அது தான் அவ்விதஞ் செய்து அப்புறம் நீர் உள்ளே போமென்று சொல்ல, அனுமார் அங்ஙனே யோசித்து சுவாமியைப் பூசித்து துயரப்பட அதைக்கண்ட மச்ச வல்லபன் ஓ ஓ பிதாவே! நீ இப்படி துயரப்படின் உள்ளே போகமாட்டீர்; நாழிகை யதிகமாகிறது. இப் படியிருக்கக்கூடாது; முன்பின் யோசிக்காமல் உமது பலமெல்லாஞ் சேர்த்துக் குத்துமையா என்று தனது மார்பைக் காட்ட, அனுமாரானவர் வருத்தத்துடனே ஐந்துவிரலையு முஷ்டியாகப் பிடித்து மச்சவல்லபன மார்பிலே குத்தினார். அந்தக் குத்தினாலே மச்சவல்ல பன் கீழே விழுந்து மூர்ச்சை யடைந்தான். அனுமார் தனது குமாரனுக்கு வலித்ததோவென்று மிக்க மன விசாரத்துடனே மூர்ச்சையாய் விழுந்த மச்சவல்லபனைத் தடவிகொடுத்துச் சுகமா யிருக்கும்படி ஆசீர்வதித்து இராமசுவாமியைத் துதித்து பாதாளலங்கையை மிதித்து இராட்சதன் எங்கே யென்று குதித்து உள்ளே சென்று

அங்ஙனம் நின்றும் ஓர் பக்கம் பிரவேசித்தார். அப்படிப் பிரவேசித்து போகிறபோது அவ்விடத்தில் முதல் கோட்டை செங்கல்லினுல் கட்டப்பட்டிருந்தது. அதைப் பார்த்து அப்பாற்போகும்போது நாலாயிரலட்சம்இராட்சதர்கள் ஆயுதத்துடனே காவலிருந்தார்கள். அவர்களை அனுமார் பார்த்து தேகம் வேர்த்து இவர்களை எவ்வாறு சங்கரிப்போமென்று கருதி தியங்கி மயங்கி செல்லுகிற போது அங்கே ஒரு மரமானது பிரமாண்டமாக இருக்கப்பார்த்து, அந்தப் பெருமரத்தை வேரோடு பிடுங்கிக்கொண்டு குபீலென்று இடிவிழுந்தாற்போல் பார்த்து இந்தச் செங்கோட்டையின் வாசற்படியை வாலினுல் படல்கட்டி மூடி முத்திரை போட்டுக்கொண்டு உள் நுழைந்து இராட்சதர்களைப்பார்த்து கோபநகை செய்து அனுமாரானவர் மாத்திறைலே சூரையடித்ததுபோல் ராட்சதர்களை யடிக்கிறகாலத்தில் ராட்சதர்களெல்லாம் கத்திகளையும் வாள்களையு முருவி புறப்பட்டு அனுமாரைக் கொல்லும்படியாக எதிர்த்து ஆயுதங்களைத் தெரித்தார்கள். அதைக்கண்ட அனுமார் சற்றுமஞ்சாமல் அவ்வித அரக்கரையெல்லாம் நொருக்கி ஒருவரோடொருவரைத் தாக்கி யுத்தஞ் செய்கிறபோது, சத்தசமுத்திர முழக்கம்போல சந்திராயுதமும் சுக்குமாந்தடியும் கண்டகோடாலியும் தெண்டாயுதமும் அஸ்திரசஸ்திர முங்கொண்டு சில ராட்சதாள் நெருங்கினுர்கள். சிலர் கண்டு வாள் வேல் வில் முதலிய ஆயுதங்களைக்கொண்டு நாற்புறத்திலுஞ் சூழ்ந்தார்கள். சிலர் யுத்தத்திற்கு நடந்தார்கள். சேனுதிபதிகள் யானை அறுபதுலட்சம்,குதிரை அறுபதுலட்சம், தேர் ஆயிரலட்சம், இராட்சதர் நூறுயிரலட்சம், இப்படிப்பட்ட சேனைசைனியங்களுடனே வந்து எதிர்த்தார்கள். அத்தருணததில் அனுமாரானவர் கையிலிருந்த விருட்சத்தினுல் நானுவிதமாகச் சாடினுர். அத்தருணத்தில் இராட்சதர் யாவருங் கால்மாடு தலைமாடு கைவேறு மெய்வேறு தோள்வேறு தாள்வேறு உடல்வேறுகச்சிதைந்துமடிந்தார்கள். ஆயுள்காலமுடிந்தார்கள். நரகவாசற் குழியில் மடிந்தார்கள். இப்படி நிர்மூலமாக அடித்து இராட்சதர்களைப் பிடித்து தரையில் அறைந்து அனுமார் வெற்றியிற் சிறந்து துறந்து வீரமோடு தீரமாக அப்புறம் போம்போது அவன்

ஆளப்பட்ட பித்தளைக்கோட்டையானது மகர குண்டல சிகரமகரமோடு மகரமாகத் தோன்றிற்று. அதிலே அந்த ராட்சதக்கூட்டங்கள் நிரையாயிருப்பதைக்கண்டு, நம்முடைய அதிர்ஷ்டம் தெய்வாதீனமிப்படியாகயிருந்தது. இன்று பிழைத்தோம்; இலைபோல் தழைத்தோம்; மூலைக்கொருவனாக இராமல் ஒன்றாகயிருந்தது நன்றாக முடிந்தது. நாம்கொண்ட கோட்பாடு தெண்டம் வராது. இனி யாவரையு முறுக்கி இறுக்கி நொறுக்கி விடுவதே யோக்கியம்; இதுவே சிலாக்கியம். இராமர் கொடுத்த ஸௌக்கியம். நல்ல பாக்கியம் என்றெண்ணி மகிழ்ந்து புகழ்ந்து அண்ணாந்து இறுமாந்து புடைத்து பூரித்து ஆரவாரித்து யுத்தத்திற்குப் பிரயத்தனமானார்.

அப்போது அனுமாரானவர் சரீரத்தை யொடுக்கி விஸ்வரூபம் புதுக்கி அண்டகோளவரைக்கும் பிரமாண்டமாக வளர்ந்து இருகையுங் குவித்து தவித்துக் கூட்டி அபிநயங்காட்டி விரலைவிரித்து அறிந்து குபீல் குபீலென்று பறந்து மெய்மறந்து அந்த ராட்சதரையடித்து வாயினாலே கடித்து ஒருவரோடொருவரைத் தள்ளிச் சிங்கம்போலத் துள்ளி யாவரையும் விடாமலும் ஆயுதமெடாமலும் காயப்படாமலுமாக போகிறபோது அங்கே இரண்டாயிரம் ராட்சதர்கள் மடிந்தார்கள். இவ்வாறாக அனுமாரானவர் அடித்து மடித்துவிட்டு புறப்பட்டுப்போகிறபோது செப்புக்கோட்டையானது மாடமாளிகை கூடகோபுரம் அரண்மனை தோன்றிற்று. அந்தச் செப்புக்கோட்டையானதைப் பார்க்குமிடத்தில் 20-லட்சம் இராட்சதர் ஆவலோடு காவலில் சேவகஞ் செய்துக்கொண்டு இருப்பதைப்பார்த்து, ஆர்த்து சீக்கிரமாக ஜாக்கிரதையோடு குபீலென்று குதித்து இராட்சதரை மிதித்து இராமரை துதித்து அரக்கரை மிதித்துக் கொன்று தின்றுபோவோமென்று அப்பாலே போகும்போது வெண்கலக்கோட்டை தோன்றிற்று. அதிலே காவல் 28 - லட்சம் இராட்சதரிருப்பதைப் பார்த்துச் சொல்லி மூடிக்கொண்டு தாப்பாளைப் போட்டு சாப்பாக ஒருவரையாகிலும் வெளிவிடாமல் எல்லோரையும் அதமாக அடித்து இடித்து நொறுக்கி அவரவ ரெலும்புகளைப் பொறுக்கிக் கடலிலே போட்டுவிட்டார். அரக்கரெல்லாம் எமபுரஞ் சேர்ந்தார்கள். பின்னர் அனுமா

ரானவர் போகிறபோது பொன்கோட்டை தோன்றிற்று. அங்ஙனம் 60-லட்சம் இராட்சதரிருக்கக்கண்டு மகிழ்ச்சி கொண்டு களித்து ஆனந்தக் கடலில் குளித்து அதற்கு மப்படியே அற்பமாக வெண்ணி அதம் பண்ணி அப் பாலே நடக்கிறபோது பவளக்கோட்டை தோன்றிற்று. அதிலே 80-லட்சம் இராட்சதரிருப்பதை யறிந்து வாலி னாலே யெறிந்து அறைகிறபோது, அங்ஙனே ஒரு கொடிக்காம்பான து நவரத்தின கசிதமாக நூறுயோசனை விஸ்தாரமாகயிருக்க, அதைப் பிடுங்கிக்கொண்டு அரக் கர் படையிலே விழுந்து அதம்பண்ணிவிட்டு அப்பாலே போகும்போது சரீரமானது சிறுக ஒரு அணுவளவாக யெடுத்துக்கொண்டு கோட்டையின்மேலே துலாயந் திரங் கட்டி யிருப்பதைப் பார்த்து அங்கேயிருக்கிற ராட்ச தரையுங்கொன்று யோசனைபண்ணி உள்ளே போகிற போது தங்கக்கோட்டை காவற்காரர்கள் மேளதாளம் வெடிதடி யெழுகமுறு தப்பட்டை எக்காள முதலிய வாத்தியத்துடனே பாதாளலோகம் கிடுகிடுவென்று இருப்பதைக் கண்டு மயங்கி யோசனை செய்வோம் எங் கேபோ யொளிப்போமென்று நாலுபக்கமு மிடமில்லா மல் அந்தப் பவளக்கோட்டைக்கு உத்தர பாரிசத்திலே ஒரு தோப்பானது உத்தியானவனமும் சிறிது விருட் சாதிகளும் சில நந்தவனமும் சோலையுஞ் சாலையுமிருப் பதைப் பார்த்து அந்தத் தோப்பிலே மறைந்திருக்க வேண்டும் என்று போய் ஒரு மரத்திலே இலைமறை விலே ஒளித்திருந்தார்.

அப்போது பரிசோதனைக்குப் புறப்பட்ட ராட்சதர் மேல் சண்டைக்குப் போய்விட்டார். அனுமார் அந்த மரத்திலேயிருந்தபடியாக நாலுதிக்கும் பார்த்து ஒருவரு மில்லையென்று மனதிலே தீர்மானித்துக் கீழேயிறங்கி அந்த வனமிருக்கிற அழகைப்பார்த்து இது யாருடைய வனமோ! இத்தனை அழகாகப் பொருந்தி யிருக்கிற தென்று மனதில் நினைத்து நாலுபுறமும் சுற்றிவரும் போது அவ்விடத்தில் ஒரு மண்டபமானது மயிலி ராவணன் பரதநாட்டியம் பார்க்க நடனஞ் செய்கிற பொதுமண்டபம் ஒருவராலு மமையாத அழகோடு கட்டி யிருப்பதை அனுமார் பார்த்து வெகு ஆச்சரியப்பட்டு இது யார் கட்டிவைத்த மண்டபமோ வென்று அதிலே

உட்கார்ந்துக்கொண்டார். இந்தக் கதை இப்படி யிருக் கக்கேளும் கௌதமரிஷியே என்று நாரதமகாரிஷி சொல்லுகிறார். அப்பால் அந்தப்புரத்திலே யிருந்த மயிலிராவணன் மாதங்கியுடனே கூடி சரசசல்லாபமாடி மன்மதன்போல் நீடி குங்குமத்தம்பஞ்சூடி சம்போக பாக்கியங்களை யனுபவித்து நித்திரை செய்துகொண் டிருந்தவன் திடீரென்றெழுந்து கண்விழித்து வெளி யிலே வந்து எத்தனை நாழிகையாயிற்றென்று நட்சத் திரம் உச்சமானதைப் பார்த்து நாழிகை 22-ஆய்விட் டது. இனி சும்மா யிருக்கக்கூடாதென்று நினைத்து பாதாள இலங்கைக்குப் பத்தினியாகிய பத்திரகாளிக்கு இராமலட்சுமணனை பலிகொடுக்கவேண்டுமே; இன்னம் பொழுதுவிடிய எட்டுநாழிகை யிருக்கிறதல்லவா; இதற் குள்ளே சுருக்காக அபிஷேகத்திற்கு ஜலங் கொண்டு வரவேண்டுமே; யாரை அனுப்பிவைப்போமென்று உடனே யோசனை செய்து தன்னுடைய உடன்பிறந்தா ளாகிய தூரதண்டிகையை யழைத்து அடி தூரதண்டி கையே! இப்போது உன்னுடைய உத்தியானவனத்திற் குப் போய் தண்ணீர் கொண்டுவா வென்று சொல்லித் தங்கக்குடத்தைக் கொடுத்து சீக்கிரங்கொண்டுவா போடி யென்று கட்டளையிட்டான்.

அந்தத் தூரதண்டிகையானவள் தானுந் தன் மக னும் சதாகாலம் விலங்கிலே அகப்பட்டிருந்தோமே, இப்போதென்னமோ நம்மைக் கொல்ல நினைத்துத் தண்ணீருக்குப் போகச்சொல்லுகிறான் என்று கருதி, மயிலிராவணனைப் பார்த்துச் சொல்லுகிறாள். வாடா அப்பா மயிலிராவணா! என்னடா என்னை தண்ணீர்க் குப் போகச்சொல்லி என்னையும் என்மகனையும் விலங்கு போட்டுக் காவலாளிகளைக் காவல்வைத்தாயே. இப்போ தண்ணீர் கொண்டுவந்தால் என்னையும் என் மகனையும் வெட்ட யோசனைசெய்து போகச்சொல்லுகிறாப்போல் தோற்றுகின்றன. அப்படி செய்கிறது உண்மையானால் எங்கள் இருவரையும் இங்கேதானே வெட்டிப்போடப் பாவென்று வருந்திச் சொன்னாள். மயிலிராவணன் தூரதண்டிகையைப் பார்த்துச் சொல்லுகிறான். அடி தூரதண்டி! அப்படி உங்களிரண்டுபேரையும் வெட்டு கிறதினால் எனக்கென்னபயம்? இங்ஙனம் வெட்டமாட்

டேனோ? வேறே ஒரு காரிய மிருக்கிறது, உங்களை வெட்டவில்லை. அஞ்சாதே; நீ தண்ணீர்க்குப் போடியென்று சொல்லி, தூரதண்டிகையே! தசகண்டராவணனுக்குச் சத்துருவான ராமலட்சுமணனை நமது பத்திரகாளிக்குப் பலிகொடுக்க வேண்டும். வெளியிலே ஒருவரோடுஞ் சொல்லாதே போடியம்மா, சுருக்கிலே தண்ணீர் கொண்டுவாடியம்மா வென்று சொல்ல தூரதண்டி மனது கசிந்து ஆ தெய்வமே! நானென்ன பாவஞ் செய்தேனோ; பூர்வத்தில் தீவினை இந்த ஜென்மத்தில் இவ்வாறு நானும் என் மகனும் காலிலே விலங்கு மாட்டிக்கொண்டு புருஷனையும் பறிகொடுத்து இப்படியிருக்கிறேனே. இந்தப்பாவ மனுபவிப்ப தல்லாமல் அந்தத் தருமபுருஷர்களான இராம லட்சுமணனைப் பலிகொடுக்கும்போது நாம் ஜலங் கொண்டுவருவது தருமமா? ஐயையோ! பாவம் வந்து விதித்ததேயென்று மயிலிராவணனைப் பார்த்து நான் தண்ணீருக்குப் போக மாட்டேன் அண்ணாவென்று சொன்னாள். அப்போது மயிலிராவணன் கோபத்துடனே அடி தூரதண்டிகையே! ஒருவரோடே சொல்லாதேயென்று சொல்லியும் நானுன்னை தண்ணீருக்குப் போகச்சொன்னால் இராமலட்சுமணனை கூப்பிடுகின்றாய்; என்னடியென்று தனது உறையிலே யிருந்த கத்தியை உருவி இதோ உன்னை வெட்டுகிறேனென்று பயமுறுத்தினான். தூரதண்டிகை நடுங்கி ஒடுங்கி பயந்து அயர்ந்து இதோ நான் தண்ணீர் கொண்டுவருகிறேன் என்று கூறித் தங்கக் குடத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டுப்போனாள். அந்தத் தங்கக்கோட்டையைத் தாண்டி துலாயந்திரம் மீண்டு மயிலிராவணனுடைய உத்தியானவனத்திற்கு வந்துவிட்டாள். அச்சமயத்திலே அனுமார் கண்டு பயங்கொண்டு அங்ஙனமே யிருந்து தன்னுடைய சரீரத்தை அணுவைப் போல் குறுக்கி அந்த மண்டபத்திலிருந்தோடி ஒருமரத்தின்மேல் ஏறிக்கொண்டு இலைமறைவிலே மறைந்திருந்தார்.

தூரதண்டிகையானவள் உத்தியானவனத்து கதவைத் திறந்து உள்ளே புகுந்துகொண்டு தாப்பாளைப் போட்டுவிட்டு உட்கார்ந்துகொண்டு தன்னுடைய விசாரத்தினாலேயழுகிறாள். ஆ தெய்வமே! என்னைப்படைத்த

கடவுளே! நானென்ன செய்வேன். இந்தப் பாதகம் என் தலையிலே விடிநததோ! இராமலட்சுமணுளுடைய ஜீவன் போக முடிந்ததோ! அந்த மகா பாதகனுக்குத் துற்புத்தி மனதிற் படிந்ததோ பார்த்தையா! புண்ணிய புருஷரானவர்க்கு இப்படிவருமோ! எந்தஎந்த ராஜ்ஜியததிற் பிறந்தார்களோ, என்னபாவம் செய்தார்களோ, இந்த ராஜ்ஜியத்தில் ஜீவன்போகப் பிரமனெழுதினனே! நானும் இந்தச் சண்டாளனுன திண்டாளன் காலிலே விலங்குதரிக்க தெய்வம் விதித்ததோ! இராமலட்சுமணுளுக்கு இப்படியும் லபித்ததோ! நமக்கும் அவர்களுக்கும் ஒன்ருகவும ஆச்சுதே! அயனுடைய எழுத்துப்போல் ஆச்சுதோ! ஆ தெய்வமே! பரமசிவமாகிய சைவமே! என்று நொநது துன்பமான வார்த்தைகளைத் தந்து வாயில்வந்தபடி உளறி பாதக விபீஷணனுகிலும் இராமலட்சுமணுளை வந்து எடுத்துக்கொண்டு போகலாகாதோ! இல்லாவிட்டால் யாரோ அனுமார் என்கிற புண்ணியவான் வால்கோட்டையாக் விட்டுக் காப்பாற்றினரே! அவருக்காகிலும் வழி துறைசொல்லி யனுப்பலாகாதோ! அடா விபீஷணு! கெடுத்தாயே, சத்துருக்கன்முன் காட்டிக்கொடுததாயே. இராமலட்சுமணுள் அனியாயமாகப் போகிருர்களே என்று பலவாருக அழுகிருள், மண்ணிலே விழுகிருள், சுவாமியைத் தொழுகிருள், பூமியை அறைவாள், இறைவாள், அணிவாள், இராமனை நினைந்து அணிவாள், இதுவென்ன விதி என்பாள், தெய்வமே கெதியென்பாள். இவ்வாறு பலவாருக மதிப்பதும் துதிப்பதுமா யிருப்பதை மரத்தில் ஒளித்துக்கொண்டிருந்து அதைக் கேட்டிருந்த அனுமாரானவர் மகிழ்ச்சிகொணடு பூரித்து ஆரவாரித்து எண்ணி யோசனைபண்ணி இவளாரோ கன்னிகை, இராமகாரியம் விசுவாசிக்கிருள், அதிகமாகப் பூசிக்கிருள், புகழ்கிருள் தெரியவில்லை; கிட்டேபோனுல் பயந்தோடிப்போவாளோ அறிவோம். அல்லது மயிலிராவணன்தானே மாறுவேடம் போட்டுக்கொண்டு இப்படி கபடுசெய்கிருனே யாதொன்றும் தெரியோம் என்று நினைந்து அந்த மரத்தின்மே லிருந்தபடியே ஆகாயவாணி சொல்லுவதுபோலவே அனுமார் சொல்லுகிருர். கேளும் பெண்ணே! உன்மகனுக்கு ஒருவனும்

திக்கில்லாமற் போனதென்ன? இராம லட்சுமணனுக்கும் அப்படி போனதென்ன சொல்லென்ன, தூரதண்டிகையானவள் கேட்டு இதேது மனிதர் பேசுகிற குரலாயிருக்கிறது. மயிலிராவணன் ஒருவரோடே சொல்லாதேயென்று போகச்சொன்னனே, நாமிங்கே வந்தோமே, இப்படி யழுதோமே, அந்த மயிலிராவணன் தான் வந்தானே? அல்லது எவரையாகிலும் கூட்டி அனுப்பினனே? இதேது பேசுங்குரலா யிருக்கிறது என்று பயந்து அழுகையை நிறுத்தி எழுந்திருந்து குளத்திலே தண்ணீர் மொள்ள இறங்கினள். அதை அனுமார் பார்த்து இனி சும்மா யிருக்கலாகாது. இவளண்டைக்குப்போய் பேசவேண்டுமென்று அந்தட்சணமே மரத்தைவிட்டிறங்கி தூரதண்டியிடத்தில் மெதுவாக நடந்துபோய் குளத்தில் படிகட்டின்பேரில் நின்றுகொண்டு சொல்லுகிறார். வாரும் பெண்ணே மாதுசிரோமணி! இராமலட்சுமணனுக்கும் உனக்கும் உன் மகனுக்கும் அனுமந்தனகிய நான் சகாயஞ்செய்யக் கொடுக்க வந்தேன். அந்த இராமலட்சுமணனை என்கிற வழிபடு கடவுளர் எங்கே யிருக்கிறார்கள்? அறிந்தால் தயவு செய்து சொல்லும் அம்மாவென்று அனுமார் கேட்டருளினர். அப்போது தூரதண்டிகை அனுமாரைப் பார்த்து பயந் தெளிந்து சொல்லுகிறாள்: ஐயா அனுமாரே! நீ என்னருகில் வாருமென்று அழைக்க அனுமார் சந்தோஷித்து அவள் அருகிற்போய் நிற்க, தூரதண்டிகை சொல்லுகிறாள். அடா வாடா அப்பா! அனுமார் அனுமாரென்று சொல்லுகிறாயே குரங்கு ஜாதியல்லவா? நீ மனுஷரைப்போல் பேசுகிறாய்; நான் எப்படி நம்புவேனென்று சொல்ல அனுமார் சொல்லுகிறார். வாரும் பெண்ணே தூரதண்டியென்னும் இராட்சதஸ்திரீயே! அப்படி ஏன் பயப்படுகிறாய்? எனக்கு அறுபத்தினலு பாஷையும் சகல சாஸ்திரமும் நீதி நூலும் சாதாரணமாய் விளங்கும். எறும்பு முதலிய சிற்றறிவுயிர்களின் பாஷையும் தெரியும்; சந்தேகப்பட வேண்டியதில்லை; சும்மா சொல்லடி யம்மா வென்று கேட்க, தூரதண்டி சொல்லுகிறாள். வாரும் ஆஞ்சநேயா! அரிராமருடையநேயா! அநணனுகிய வாயுவின் சேயா! நான் சொல்வதைக் கேளும் புஜபலபராக்கிரமம்

பண்ணுகிறபோது ஒரு கையினால் இராட்சதக்கூட்டங்களை யடித்தால் பதினெட்டு அக்ரோணி தண்டு தளம் மாண்டுவிட்டது என்றார்களே; அப்படிப்பட்ட புஜபல பராக்கிரமசாலியாகிய நீ இப்படி குழந்தைப்பிள்ளைபோலிருந்தால் எனக்குசம்மதிபடாது. உன்னுடைய விஸ்வரூபத்தை எனக்குக் காண்பிக்கவேண்டும். அதன்பின்பு நான் சொல்லுகிறேனென்று சொல்ல, அனுமார் தூரதண்டியைப் பார்த்து நீ அந்தச் சொரூபத்தைப் பார்த்தால் பயப்படுவாயென்றுசொல்ல அதற்குதூரதண்டிகையானவள் சொல்லுகிறாள்.

கேளும் ஆஞ்சநேயரே! நீர் எவ்வித சொரூபம் எடுத்துக் காட்டினாலும் பயப்படமாட்டேன். மயிலிராவணனுடைய மெய்கைகளைக் கண்டு பயந்தெளிந்தேன். நீர் எவ்வித ரூபமெடுத்தாலும் பயந் தோற்றாது. துரிதத்தில் உம்முடைய விஸ்வரூபத்தை எடுத்துக் காட்டுமையாவென்று தூரதண்டிகை சொல்ல, அனுமார் பாரும் பெண்ணே யென்று சொல்லி மேகமண்டலம் வாயுமண்டலம் சந்திரமண்டலம் சூரியமண்டலம் நட்சத்திரமண்டலம் அளாவும்படியாக வளர்ந்தார். தூரதண்டி பார்த்து பயந்து நடுநடுங்கி ஒடுங்கி கிடுகிடுத்து ஆஞ்சநேயரைப்பார்த்து சொல்லுகிறாள். அனுமாரே! உமது சொரூபத்தைப் பார்க்கத்தக்கவளல்ல, போதும் போதுமையாவென்று ஆடிப்பாடி அவரை நாடி அவர் பாதம் தேடி விழுந்து எழுந்து அடிபணிந்து அனுமார் என்று துணிந்து விசாரந் தணிந்து சிரமேற்கரங் குவித்து தீர்க்கதண்டஞ் சமர்ப்பித்தாள். உடனே அனுமார் அந்த சொரூபத்தைவிட்டு எப்போதும்போல சுருக்கி தூரதண்டிகையண்டையில் நெருங்கி பயப்படாதே யென்று தைரியஞ்சொல்லி பெண்ணே! உன் காலில் விலங்கேது? யார் போட்டார்கள்? என்ன காரணத்தினால் உனக்கு விலங்கிட்டார்கள்? எங்கே திருடினாய்? என்ன அடாதகாரியத்தைச் செய்தாய்? என்ன சுமங்கலியே! உன்னைப்பார்த்தால் சகல ஆபரணங்களுடன் பூஷணாலங்கிருதையா யிருக்கிறாய்? கழுத்திலே மங்கிலியம விளங்கவில்லை. உன் புருஷன் இருக்கிறானோ இல்லையோ? இராமலட்சுமணாள் உயிரோடு சுகமாயிருக்கிறார்களோ யில்லையோ? உனக்கு இந்த விலங்கு வந்த

காரணார்த்தம் என்ன? சொல்லுமம்மா என்று கேட்டார்.

இந்த வார்த்தையைக் கேட்ட தூரதண்டிகை அனுமாரைப் பார்த்து அன்போடும் இன்போடும் அர்ச்சித்துப் பூசித்து யோசித்துச் சொல்லுகிருள், கேளுமையா அனுமாரே! இந்த மயிலிராவணன் மகா திண்டோளன், வெகு சண்டாளன், என்னையும் என் மகனையும் விலங்கிலே போட்டான். நாங்கள் திருடவில்லை அள்ளவில்லை துன்பஞ்செய்துகொள்ளவில்லை. அவன் வார்த்தையைத் தள்ளவில்லை. அந்தப் பாதகன் ஆங்காரத்தினலே என் புருஷனைக் கொன்று என்னையும் என் மகனையும் அநியாயமாக நாலாயிர வருஷ காலமாய் முன்னூறுபாரம் எழுகினலே மிகுதியோடு தகுதியான கையிலும் மெய்யிலும் தோளிலும் விலங்கு பூட்டிவிட்டான் என்று கூற, அவ்வசனத்தைக் கேட்டு அனுமார் நல்லது பெண்ணே! அந்தச் சண்டாளனிட்ட விலங்கு எங்கே என்று ஆக்கரித்துப் பற்களைக் கடித்து மீசை துடித்து கரத்தை மண்மீது அடித்து காலையுங் கையையும் பிடித்து விலங்குகளை ஒடித்துவிட்டார். தூரதண்டிகை கண்டு மனமகிழ்ச்சிகொண்டு நயந்து வியந்து அனுமாரென்று பயந்து கைகட்டி வாய்பொத்தி தூரதண்டிகை உனக்கு விலங்குபோட்ட காரணம் என்ன? உன் புருஷனுகிய புண்ணியவான் பெயர் என்ன? உன் மகன் விலங்கிலே கிடக்கிறுனென்றழுதாயே; அந்தச் சங்கதிகளையெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லவேண்டும் என்று அனுமார் கூறினர்.

அந்த வசனத்தைக் கேட்ட தூரதண்டிகை சொல்லுகிருள். கேளும் அனுமாரே! என்பேர் தூரதண்டிகை; என் புருஷன்பேர் காலதத்தன்; என் குமாரன் பேர் நீலமேகன். கேட்டீரோ அனுமபூபா! என் புருஷனைக் கொல்லவந்த காரணம் மயிராவணன் எனக்கு அண்ணன், அவன் இந்தப் பாதாள லங்கையை அரசாட்சி செய்துகொண்டிருந்தவன். என் புருஷனையும் தன்னோடுகூட வைத்துக்கொண்டு சகல அதிகாரமெல்லாம் விசாரணைகளையும் விசாரித்து வரச்சொல்லி உத்தியோக கட்டளை திட்டமாக யிட்டிருந்தான். நானும் என் புருஷனுடன் சுகமாகச் சிறிதுகாலம் வாழ்ந்து

இருக்கும்போது, எனக்கு கர்ப்பம் தரித்து ஒரு பிள்ளையைப் பெற்றேன். அந்தப் பிள்ளைக்கு என் புருஷன் நீலமேகன் என்று பேரிட்டார். அதன்பின்பு மயிலிராவணனுக்கு மாதங்கி என்பவளுடைய வயிற்றிலே ஒரு பெண் பிறந்தது. அப்பெண்ணுக்கு ரூபவதி யென்று பெயரிட்டு நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துவந்தார்கள்.

அப்படி வளர்த்துவந்த சிறிது காலத்திற்குப் பின் என் புருஷனவன் மகனை எடுத்து முத்தங்கொடுத்து மடிமீதில் வைத்துக்கொண்டு கொலுக்கூட மண்டபத்திலிருந்தார். அப்போது மயிலிராவணனும் தன்னுடைய குமாரத்தியாகிய அதிரூபவதிக்கு சகல ஆபரணமும் தரித்து மடியின்மீது வைத்துக்கொண் டிருந்தான். இப்படியாக ஏக சிங்காதனத்தின் மீதிலே யிருக்கும் போது மயிலிராவணன் என் புருஷனைப் பார்த்து வாரும் பிள்ளாய் காலதத்தா! உன்னுடைய மகனுக்கு இந்த ரூபவதி என்கிற பெண்ணைக் கொடுத்து கலியாணம் பண்ணிவைக்கிறேனென்று சொன்னான். அந்தட்சணமே இடியிடித்ததுபோல் ஆகாயவாணி சொன்னதாவது அடா வாடா மயிலிராவணா! இந்த ரூபவதியை யாருக்குக் கொடுத்து விவாகஞ் செய்துவைக்கிறாயோ அந்தப் புருஷன் பெயர் நீலமேகனாகும். அவனுக்கே இந்தப் பாதாள லங்கை முடிபொறுக்குமென முக்காலுஞ் சொல்ல, அப்போது அந்தச் சபையிலிருந்தவர்களெல்லோரும் அதியந்தமோடு கேட்டுக்கொண்டிருந்தார்கள். உடனே மயிலிராவணன் திடீரென்று தனது சிங்காதனத்தை விட்டுக் கீழேகுதித்து கோபம் அதிகரித்து அச்சபையை மிதித்துகுதித்து சொல்லுகிறான்: கேளுங்கள் சபையோர்களே! நான் விளையாட்டுக்குச் சொன்னதை நீலமேகனுக்கு ஸ்தாபிதமாக அந்த ஆகாயவாணியாரும் உறுதி சொல்லலாமோ? நீலமேகனுக்கு என் குமாரத்தியான ரூபவதியைக் கொடுக்கிறேனென்று சும்மா சொன்னேனே யொழிய நிஜமாகச் சொல்லவில்லையே. எனக்குச் சரியான பலசாலியானவனெவனோ அவனுக்கல்லவோ கொடுப்பேன். இந்த சொற்பமுள்ள நீலமேகனுக்கு என் குமாரத்தியைத் தருவேனோ? இவ்வசனம் அடாது. இனி விட்டுவிடா

மல் காலதத்தனையும் அவன் பெண்சாதியையும் பிள்ளையையும் கொல்லாமல் விட்டுவிட்டால் பின்னால் நமக்குக் கெடுதல் தருமென்று எண்ணி, இதோ இந்தக் கத்தியினால் வெட்டுகிறேன் என்று என் புருஷனைப் பிடித்துக்கொண்டான். அப்போது என்மகன் ஓட்டமாக ஓடிவந்து இப்படி சேதியென்று என்னோடு சொன்னான்.

அப்போது நான் என் மகனாகிய நீலமேகனை வீட்டிலேபோட்டுக் கதவை மூடி ஒளித்துவைத்துப் புருஷனை அழைத்துவர மீண்டும் திரும்பச் சென்றேன். அதற்கு முன்னமே மயிலிராவணன் என் புருஷனை வெட்டிப்போட்டு எனக்கு எதிராக அக்கத்தியையும் பிடித்துக்கொண்டு ஓடிவந்து அடி தூரதண்டிகையே! உன் மகன் ஓடிவந்தானே, அவன் எங்கே என்று என் தலைமயிரைச் சுருட்டி கீழேதள்ளி அவன் கையினாலே ஓங்கிக் குத்தும்வேளையிலே, நான் அண்ணா! என்னிரு கண்ணா! ஐயா! இருபதுகையா! ஆண்டவனே! முடிகள் பூண்டவனே! என்னையனே! வெட்டுகிறாயா? என்று இரக்கமோடு வேண்டினேன். அவன் மனது இரங்கி இதோ பெருவிலங்காகிய ஒரு விலங்கு மாட்டிவிடுகிறேனென்று பதினாயிரம்பாரமுள்ள எழுகினாலேபண்ணின இந்த விலங்கை எனது காலிலும் என் குமாரனுடைய காலிலும் தரித்தான். அவ்விலங்குடனே என்மகனை நீலமேகன் காவற்கூடத்திலே யிருக்கிறான் என்று முறையாக ஆதியோடந்தமாகக்கூறி, பின்னும் அநுமாரே! நீ என்பங்கு தேவனாக வந்து நாற்பதினாயிர வருஷமாகத் தரித்திருந்த இப்பெருவிலங்காகிய திரு விலங்கை முறித்துத் தரித்துவிட்டீரே; வானர சேனாபதியே! வழிபடு தெய்வ கதியே! மாயன் புகழு நிதியே! மன்னர் துதிக்குந் துதியே! ஆஞ்சநேயா! ஆ...ன் சகாயா! அரும்பதத் தூயா! அடியார்க் கருளு நேயா! அநுமந்தா! என்முன் வந்தாய்; ஐயனே! மெய்யனே! தீரனே! வீரனே! சீலா! அன்பர் அநுகூலா! சரணம் சரணம், என்னை ஆண்டருளுந்தருணம் என்று பற்பலவாறு புகழ்ந்து அஞ்சலிசெய்து இரண்டு கைகளையும் நீட்டி திருமுகங் காட்டி அபயஸ்தம் தாவென்று கேட்டாள்.

அனுமார் சந்தோஷித்து தாரதண்டிகையைப் பார்த்து அவள் கையைப் பிடித்து உள்ளங்கையிற் பிடித்து நன்மதி யெடுத்து அபயஸ்தங் கொடுத்துச் சொல்லுகிறார்: வாரும் பெண்ணே! உன்சேதியெல்லாங் கேட்டு என் மனங் களித்தேன். ஆனந்தக் கடலில் குளித்தேனென்று எனது பராக்கிரமம் நீ யறியப் போகிறாய். அந்த மயிலிராவணனை அகம்பண்ணிப் போடுகிறேன். உனது குமாரனாகிய நீலமேகனுக்கு அவனது பாதாள யிலங்கையாகிய இந்த நகரத்திற்குப் பெரிய துரையாகப் பட்டங்கட்டி அந்த ரூபவதி யென்னும் மாதை அவனுக்கு மணஞ்செய்வித்துப் போவது மன்றி நாடு நகர முதலியவற்றைச் சீர்திருத்தி அரக்கர் படைகளை நீக்கிவிட்டுப் போவேன் அஞ்சாதே யென்று பற்பல தைரியஞ் சொல்லி பின்னுஞ் சொல்லுகிறார்: கேளும் மாதே தாரதண்டிகையே! நமது வழிபடு தெய்வமான இராமலட்சுமணாள் எங்கேயிருக்கிறார்கள்? மயிலிராவணன் எங்கே யிருக்கிறான்? என்ன செய்கிறான்? அவன் புஜபல சௌரியமென்ன? பராக்கிரமம் வீரதீரம் என்ன? எல்லா மறிவாயே சொல்லவேண்டும் என்று வினவ, அப்போது தாரதண்டிகையானவள் சொல்லுகிறாள்.

வாரும் அனுமாரே! என்ன சொல்லப்போகிறேன். நிஷ்கள நிர்மல நிர்விஷய சுத்தசைதன்னியமாகியும் பார்வதா சமேதனாகியும் குணங்குறி யில்லாததாகியும் விளங்கி யிருக்கப்பட்ட சாட்சாத் பகவானாகிய பரமேஸ்வரனிடத்திலே மூவேழு தலைமுறைக்கும் அழியாத வரம்பெற்றவன், வீராதிவீரன், தீரமுள்ளவன். மாய வித்தைகள் கற்று சிறந்தவன், புண்ணியமற்றவன். அவனை தேவராலும் மூவராலும ஜெயிக்க முடியாது. அவனுக்கினை இந்த மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும் ஒருவருமில்லை. அவனைப்போலொத்த பராக்கிரமசாலிகள் யாவருமில்லை. நீர் அவனிடம் ஜாக்கிரதையாகச் சண்டைசெய்து ஜெயிக்கவேண்டுமென்று தாரதண்டிகை சொல்லினாள். அனுமார் சொல்லுகிறார். நல்லது அப்படியே அவன் சமர்த்தனானவனென்று சொன்னாயல்லவா நல்லதாகட்டும். அவனை நான் ஒருவனுமே ஏகாங்கியாய் வீரதீர சண்டப்பிரசண்டனாய்

யுத்தத்தில் மடித்துவிடுகிறேன். என் பலத்தை அறியப் போகிருய். அதிருக்கட்டும் இதோ யிருக்கிற தங்கக் கோட்டை வாசலிலே துலாயந்திரம் ஒன்று இருக்கிற தாம். அதிலே சிறிது ராட்சதர்கள் இருக்கிருர்களாம். அதன் விபரம் விரைவிலே சொல்லென்ன, தூரதண் டிகை சொல்லுகிருள். கேளுமையா வானரசிரோன் மணியே! அதோ அந்தக் கோட்டைவாசலில் துலா யந்திரங் கட்டி யிருப்பதைப் பாரும். அதிலே மயிலிரா வணனுக்குச் சத்துரு யாவர் வருவாரோ அவர்களைத் தண்டிப்பதும் துண்டிப்பதுமாக நிறைகோலில் நிற் பார்கள். அந்த நிறைகோல் மூன்றுதாஞ் சாயுமாயின் அவன் சத்துரு, இவன் மித்துரு, இவன் இஷ்டன், இவன் துஷ்டன், இவன் சகோதரன், இவன் விசுவாச னென்று அறிந்துகொள்ளுவார்கள். இவர் சத்துரு வென்று கண்டுகொண்டால் அங்ஙனங் காவலாகவிருக் கும் இருபதுலட்சம் இராட்சதர்கள் வந்து மூளைந்து யுத்தவாதம் புனைந்து கோபக்கனல் கனைந்து சினந்து கதித்து கொதித்து மதித்து துடித்து பிடித்து அடித்து கசக்கி நசுக்கி கைத்து வதைகது மண்ணிற் புதைத்து விடுவார்களென்று கூறினுள்.

அதைக்கேட்டு அனுமாரானவர் சொல்லுகிருர். வாரும் பெண்ணே! இந்தக் கோட்டை வாசலிலுள்ள அவரவரை யானே தப்பாமல் கொல்லுவேன். நீ எனக் கோருபாயம் செய்யவேண்டுமென்ன, தூரதண்டிகை அனுமாருக்குச் சொல்லுகின்றனள். ஓ வீராதிவீரபராக் கிரம விற்பன சொற்பனமுள்ள அனுமானே! என்னு லாகும் காரணர்த்தமானது யாவை? அவைகளைச் சொல்லுமையா, அடியேன் சிரமேற்கொண்டு நடக்கப் பிரியமுற்றிருக்கிறேனென்ன, மயில்போலும் சாயலும் அயில்போலும் விழியுங் குயில்போலு மொழியும் அன் னத்தின் ஒயில்போலும் நடையுடைய பெண்பாலாகிய தூரதண்டிகையே! கேளும் மாதர்க்கரசியே! அந்தக் கோட்டை வாசலுக்கப்பால் என்னைக் கொண்டுபோய் விட்டால் நான் அத்தனைபேரையும் ஆலையிலாங்கின்ற கரும்பு எவ்வண்ணஞ் சதையுமோ அவ்வண்ணம்போல் யாவரையும் மடித்துக் கடுத்து படுகளஞ் செய்துவிடு வேன், எமபுரஞ் செலுத்திவிடுவேன், இந்த உபகாரஞ்

செய்தால் போதுமானது என்று அனுமார் சொல்ல, அதைக் கேட்ட தூரதண்டிகை கேட்டு நடுங்கி ஒடுங்கி ஆஞ்சநேயரோடு சொல்லுகிறாள். ஐயனே! வானரத் துய்யனே! யான் எவ்வாறு போவேன்? விலங்கு முறி பட்டுத் தறிபட்டு போனதே. இனி எவ்வாறு செல்ல என்ன உபாயம், நீர் செய்தது சகாயம். அங்ஙனே போனால் அபாயம் வருமே? என்ன செய்கிறது. இதுவு மன்றி உம்மை அவ்விடம் அழைத்துப்போனால் தராசு முள்ளாகிய நிறைகோல் சாயுமே, உடனே காரியம் கெட்டுப்போகுமே. சரிகட்டிப் போடுவாரே, ராமமூர்த்தி தேடுவாரே. இதற்கென்ன செய்கிறது? என்னால் ஆகா தென்று வருத்தமடைந்து சொன்னாள்.

அனுமார்நோக்கி மனதைத் திடமாக்கி கவலை என், பதை நீக்கி கலக்கமென்பதைப்போக்கி தானொரு விசே டஞ் சொல்லினர். அதாவது கேளும் பெண்ணே! நீ கூறினவாறே அந்தத் தராசாகிய நிறைகோல் சாயுமாயி னும் உன்னை எவனொருவன் கண்ணோக்கிப் பார்ப்பானா கில் உடனே கண்டிக்கவும் தண்டிக்கவும் காத்து வரு கிறேன் பயப்படாதே! இந்த உபகாரம் பண்ணவேணு மென்று கூற, அம்மாது சொல்லுகிறாள்: ஆனாலும் எப்படி கொண்டுபோவேன்? இவ்வளவு கெம்பீரமான ரூபமோடிருக்கிறீரே என்று சொல்ல, அனுமார் சொல்லுகிறார்: வாரும் பெண்ணே! இதோ என்னு டைய விசித்திரத்தைப் பாருமென்று கூறி சந்தோஷ மீறி சரீரத்தைப் உருவி காலமையை நிருவி ராட்சதரைக் கொல்லக் கருவி திரணமாத்திரத்தில் சிறிய வுருவமமை ந்து, தூரதண்டிகையைப் பார்த்து கண்ணீர் குடத்தை யெடுத்து தலைமீது வைத்துக்கொள்ளச் சொல்லி அந்த தண்ணீர் குடத்தின்மீதிலே மாங்கொத்தை யொடித்து அந்நீர்க்குடத்திற்போட்டு மாவிலைக்கொத்திலே ஈபோல் மறைந்திருந்தார். தூரதண்டிகை மகிழ்ந்து அனுமார் இருக்கிற மாவிலைக்கொத்தினைப் பிடுங்கி குடத்தின்மீது வைத்து மெள்ள மெள்ள நடந்து செல்ல தங்கக்கோட் டையின் வாசலிலே யிருக்கிற இராட்சதரைப் பார்த்து, எவ்வாறு போவோம்? என்ன அனர்த்தமாகுமோ? என்று எங்கி வீங்கி காலடி வாங்கி ஒடுங்கி நடந்து தங்கக்கோட்டையைக் கடந்து துலாயந்திரமான தரா

சென்கிற நிறைகோலுக் கப்பால் போனாள். உடனே அந்தத் தராசுக்கோலானது தலை கீழ்மேலாயிருக்க பெருக்க விழுந்தவுடனே இராட்சதாள் திடுக்கென்று பயந்து நயந்து வியந்து அயர்ந்து அண்ணாந்து இறுமாந்து பார்க்குமளவில் சத்துருவைக் கண்டதில்லை. தூரதண்டியைக் கண்டார்கள். கோபங் கொண்டார்கள். யாரையோ ஒருவனை அழைத்துவந்தாற்போற் றோன்றுகிறது என்று ஐயுற்று அங்ஙனமிருந்த 80000-லட்சம் இராட்சதர்களும் அதிகாரியான தலைவன் ரத்தாட்சன் என்பவனோடு முறையிட்டார்கள். ரத்தாட்சன் அதிசீக்கிரமாக வலது பாரிசத்திலிருந்த கத்தியை யுருவிக் கொண்டு தூரதண்டிகை முன்னேசென்று நின்று அடிவாடி தூரதண்டிகை யென்னுந் திருடி! எங்கே போகிறாய்? யாரை அழைத்து வந்தாயோ! சோதனை காட்டடி; இதோ உன்னை வெட்டிகிறேன குத்துகிறேன் கழுவேற்றுகிறேன். கள்ளமில்லாமல் உள்ளபடி சொல்லடி இங்கே நில்லடி யென்று சொல்ல, கிடுகிடென்று அயர்ந்து நிற்கலுற்றாள்.

ஆஞ்சநேயர் அந்தச் சமயத்தில் மாவிலை கொத்திலிருந்தவண்ணமாக ஒளித்து மனது களித்து சிரசை அசைத்து திடீலென்று கோடை இடியிடித்ததுபோல் குமுறி ஆகாயம் பூமி பாதாளம் வரையில் ஏகசொரூபமான விஸ்வரூபமெடுத்து கீழேகுதித்து கோபங்கதித்து அந்த ராட்சதன உருவிய கத்தியை பிடுங்கிக் கொண்டு அரக்கரோடு எதிர்த்து யுத்தஞ்செய்கிறபோது அரக்கர்கள்கண்டு அவரவர் வில்வளைத்து நாணேறிட்டு பூரி கோவை ஆமம் பூட்சி யஞ்சினி நரம்பு நாரி புடம் குணம் முதலியது நாணேறிட்டு, நாகம் வாளி கணை பல்லவம் வண்டுத்துரம் சங்கம் பத்திரம் அத்திரம் கோவென்று பேர்பெற்ற அம்புகளையும் விசிதப்பூதை பத்ரி ஏவு பாளம் தோணி யாழி கொடை சிலிமுகம் என்று நாமகரணம் பெற்ற பாணங்களையும் கரவேக சரவேக உரவேகமாக வில்லிற் புகைத்து குணத்தொனி பண்ணி ஆகாயம் பூமி அண்ட கடாக மெண்டிசையும் வெடிக்கும்படியாகக் கார்மழைபோலப் பொழிந்தார்கள். அனுமார் அதுகளைக்கண்டு மகிழ்ச்சிகொண்டு இடதுகை கேடயத்தினோடு விலக்கி வலதுகை கேடயத்தி

ஞலே ஓங்கி படீல் படீலென அடிக்கிறபோது, அந்த அடியானது கோடைகாலத்திலே இடியிடித்ததுபோல் திடீல்திடீலென்று கர்ப்பங் கலங்கும்படி இடித்து அடித்து புடைத்து காலால் துடைத்து தலைமாடு கால்மாடு தலைமாடாக வெட்டி புஜங்களைத்தட்டி பிணமலைபோல் குவித்து தாகம் தாவென்று சிலர் தவிக்க அனுமாரானவர் சற்றுமிளையாது களையாது யானைக்கூட்டத்திலே போய் விழுந்த வீரசிங்கம்போல் ஒருமணிநேரம் முன்னும் பின்னும் பாராமல் ஜாடுகிறபோது சிலர் ஏங்கினார்கள், சிலர் தூங்கினார்கள், சிலர் ஆத்மத்தைவிட்டு நீங்கினார்கள், சிலர் வேலாயுதத்தைத் தூக்கினார்கள், சிலர் பரமண்டலத்கில் ஓங்கினார்களா, சிலர் ஆயுதங்களைக் கையில வாங்கினார்கள், சிலர் மூர்ச்சைபட்டுத் தேங்கினார்கள், சிலர் குத்துயிராக வுளறினார்கள், சிலர் சிற்றுயிரோடு தேறினார்கள். இப்படி நானாவிதமாக அனுமார் நிர்த்தூளி செய்துவிட்டார்.

அந்த அரக்கர் படையிலே பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் மன்னர் மண்டலீகா யானைத்தலைவர் சேனைத்தலைவர் குதிரைத்தலைவர் ஒட்டகத்தலைவர் படைத்தலைவர் யூகத்தலைவர் தண்டத்தலைவர் முதலிய இராட்சதபடைகளெல்லாம் ஈட்டி பாங்கு சாங்கு பாலா எரியம்பு பொரியம்பு தறியம்பு நெறியம்பு வலலுகள் சங்கு சக்கரம் காலாள்கள் கோதண்டம் பிண்டி பாலம் கொடுமரம் தொடுமரம் விடுமரம் எடுமரம் பழுப்படைதொழுப்படை எழுப்படை வேலாயுதம் சூலாயுதம் அஸ்திரம் சஸ்திரம் வச்சிராயுதம் குந்தம் கொந்தம் தந்தம் கூர்வாள் மீன்வாள் உடைவாள் கடைவாள் கூர்வாள் குறுந்தடி நெறுந்தடி இவ்வாறு நானாவித ஆயுதங்களை எடுத்து முகங்கடுத்து ராட்சதர்களெல்லாம் பற்களை நெறநெறவென்று கடித்து மீசை துடித்து அனுமாரோடு கைகலக்கிறகாலத்தில் ஆஞ்சநேயப்பெருமான் சீக்கிரமாக ஜாக்கிரதையோடு ஆககிரமித்து பராக்கிரமங் காட்டி வியாக்கிரமம்போல் சீறி கோபமீறி அவனை இவனடிக்க அவன்மார்பில் இவன்குத்த இவன்மார்பில் அவன் குத்த அவன் தோளில் இவன் குத்த இவன் தோளில் அவன் குத்த வலம் இடமாக இடம் வலமாக கிறுகிறென்று நின்று சென்று சுழன்று உழன்று கழன்று

விழன்று ஒருவர்க்கொருவர் சரிசமானமாகச் சண்டை செய்தார்.

இப்படி அவர் சண்டை செய்கிறதை ஆகாயத்தி லுள்ள தேவர்கள் யாவரும் பார்த்து ஆச்சரியப்பட்டு ஆதிகாலத்திலே சாட்சாத் பிரம சைதன்னியராயும் தந்தைக்கு உபதேசம் வந்தித்த குருவாயும் இருக்கப்பட்ட கந்தன் கடம்பன் காங்கேயன் வேலுடைக் கடவுள் தேவசேனாபதி மயிலேறுசேவகன் கோழிக்கொடியோன் காந்தன் சேந்தன் குறிஞ்சிவேந்தன் வள்ளிகாந்தன் என்று சொல்லத்தக்க சிவசுப்பிரமணியக்கடவுளோடு எதிர்த்த சூரபச்மாவும் அவனுடைய புத்திர மித்திர களத்திராதி சேனைகள் எவ்வாறு அழிந்தனவோ அவ்வாறு சுப்பிரமணியக்கடவுள்போல் இந்த அனுமார் ஒருவராக இருந்து அந்தத் தங்கக்கோட்டை வாசலிற் காவலாயிருமத மயிலிராவணனுடைய இராட்சதப்படைகளைப் பெரு விருக்ஷத்தின் அச்சுவேர் நச்சுவேர் சிறுவேர் பெருவேர் பக்கம்வேர் பழுவேர் சல்லிவேர் மூவேர் அடிவேர் நுனிவேர் இப்படிச் சொல்லப்பட்ட வேர்கள் களைந்து மரத்தை வெட்டித் தள்ளுவதுபோல் அரக்கர்படைகளைத் தலைகாட்டாமல்முறித்து தலைகளைத் தறித்து நிமைப்பொழுதிலே படுசூரணம் பண்ணினார். அதன்றி ஒரு கற்பனை சொல்லுகிறேன். (அதாவது:- வானத்தின் மாலைப்பொழுதில் செவ்வான மிடுகிறது. அதை ஆகாயவாணி பூமிதேவியைநோக்கி, அடி மண்ணுக்கரசியே! என்னைப் பார்; சிவப்புப் புடவை கட்டிக் கொண்டேன் என்று சிலநாளைக்குமுன்னே சொல்லி யிருந்தாள். அவ்வார்த்தையை வெகுநாளாய் மனதில் வைத்திருந்த பூமாதேவியும் இன்று யுத்தகளத்திலே இரத்தவெள்ளம் ஓடினதை பூமாதேவி கண்டு ஆகாய வாணியை நோக்கிச் சொல்லுகிறாள். அடி விண்ணுக்கரசியே! நீ சிவப்புப் புடவை கட்டிக்கொண்டதுபோல நானும் கட்டிக்கொண்டேன் பாரடி! என்று சொல்லுமாப்போல அனுமார் போர் செய்தனர். இது புராணிகர்கூற்று, அதாவது இக்கதை எழுதினவர் கருத்தாம்.)

அனுமார்சொல்லுகிறார்: கேளும் பெண்ணே தூரதண்டிகையே! இப்போது நடந்த யுத்தகளரியைப் பார்த்

தனையா? எமது பராக்கிரமம் வீரதீர சூரத்துவத்தை என்று சொல்ல, தூரதண்டிகை சந்தோஷித்து அனுமாருக்கு வலம் இடம் இடம் வலமாக வணக்கந்தந்து மனத்தன்பு கூர்ந்து ஆர்ந்து சொல்லுகிறாள். ஓ! ஓ! அனுமாரே! நீர் வல்லவர், யாவருக்கும் நல்லவர். உம்மைப்போல பராக்கிரமசாலி உலகத்திலில்லை என்று துதித்தாள். மனதில் மதித்தாள். நீர்க்குமிழிபோல் குதித்தாள். இவரே அதிவீரனென்று கட்டளை விதித்தாள். எரிகிற வெண்ணையில் விழுந்த அதிரசம்போல் குதித்தாள் மகிழ்ந்தாள் புகழ்ந்தாள், மயிலிராவணன் கெட்டான் போவென்று யிகழ்ந்தாள். அச்சமயம் நோக்கி ஆஞ்சநேயர் சொல்லுகின்றனர். மாதர்க்கரசியே! கடகராஜன் வீடெங்கே? தேடி இங்கே வந்தது என்றுகூற, ஐயா! அனுமந்தனய்யா! சிரஞ்சீவிமெய்யா! சொல்லுகிறேன். இதோ இருக்கிறதே அது கடகன் வீடு, அதற்கப்பால் விருசிமுகன் வீடு, அதற்கப்பால் பத்திரகாளியம்மன் வீடாகிய கோயில், அதை அனுமார் கேட்டு அப்படியாவென்று சொல்லி கடகன் வாசலிலே நின்று கொல்லுவோமென்று தனது அழகிய வாலை உள்ளே பஞ்சுபோல் நுழையவிட்டார்.

அங்ஙனம் அவன் பெண்சாதியுடன் மன்மதனும் ரதியும்போல பஞ்சணையின்மீது சரச சல்லாப வுல்லாச விலாச அமளி செய்துக்கொண்டிருக்கிற சமயத்தில் அனுமாரானவர் வாலால் இருவரையும் மடலிறுகக் கட்டி சுருக்கி வுருட்டி புரட்டி திரட்டி தெருவிலிழுக்கக் கண்டு ஜெயங்கொண்டு சிரமேற் கரங்குவித்து, ஆண்டவரே! நான் முன்னேவந்து அழகிய வாலுக்கு எனது பற்களை பலிகொடுத்துப் புறமுதுகு காட்டி ஓடிவந்துவிட்ட என்னை ஏனிழுக்கிறீர்? உமது வார்த்தைக்கு வரவில்லை, அதோ பாவி மயிலிராவணன் இருக்கிறான் செல்லுமையா சரணம் சரணம், விட்டுவிடும் என்று வணங்கி இணங்கிச் சொல்ல, அனுமார் மனதிரங்கிப் புருஷனையும் பெண்சாதியையும் விட்டுவிட்டார். அதன் பின்பு விட்டுமுகன் வீட்டிலும் அவ்வாறு தம் வாலைப் புகட்டிவிட்டு அந்த அரசனையும் மடலிறுகச் சுருட்டிக் கட்டி இழுத்துக் கரகரவென்று சுழற்றி நிலத்திலே அடித்தார். அவன் யமபுரஞ் சேர்ந்தான்.

அப்பால் மந்திரி பிரதானி தண்டத்தலைவர் யூகத் தலைவர் அணித்தலைவர் முதலியபேரையும் அவ்வண்ணமே தமது வாலை ஒழுங்காகப் புகும்படிசெய்து அந்தப் பத்து வீட்டையும் இடிவிழுந்த மரத்தைப்போல அதம்பண்ணி யாவரையுங் கொன்று கசக்கி நசுக்கித் தீயிற் பொசுக்கி தூளனம்போல் செய்து தூரதண்டிகையை நோக்கிச் சொல்லுகின்றனர்; மாதுசிரோன்மணியே! பார்தலைதயா என்றார். அதற்கு அவள் வாரும் வானர சிரோன்மணியே! என் மகனானவன் அந்த வீட்டில்தான் விலங்குடனே யிருக்கிறான், தயவுசெய்து அவன் விலங்கைத் தெறித்துவிடும் என்று நமஸ்கரித்தாள்.

அனுமாரானவர் அதேது நான் இந்தப் பாதாள இலங்காபுரந்தரா துரந்தரா நிரந்தராவென்று கூறுமாப்போலக்கூறி அவன் இருக்கிற வீட்டின் கதவை நொறுக்கி உள்ளேபோய் விலங்குகளை நறுக்கிவிட்டு உள் நுழைந்தார். நீலமேகன் அனுமாரைப் பார்த்து இவனெவனோ புதிதாகத்தோன்றி நம்மைக் கொல்ல வந்த கூற்றுவனென்று கருதி மூலையில் நடுங்கி ஒளித்தான். அனுமாரானவர் அவனைப் பார்த்து அடா நீலமேகா! வெளியே புறப்படடாவென்று சொல்லக்கேட்டு திரும்பவும் கதவுமூலையில் ஒளித்தான். அனுமார் கிட்டேபோ யிருப்போமாகில் இவன் மிகவும் பயந்திருக்கிறானென்கிறதாய தூரதண்டிகையை யழைத்து அடி பெண்ணே! உன் மகன் என்னைக்கண்டு மூலையிலே பதுங்கினான் அவனை நீவந்து அழையுமென்று சொல்லினார். தூரதண்டிகை அவ்வாறே காவற்கூடத்திலே சென்று நீலமேகனைப் பார்த்து, அடா நீலமேகா! என் மூலையிலே பதுங்கினாய்? வெளியிலே வாடா குமாரகா வென்றழைக்க, அவன் பயந்தெளிந்து தாயாரிடம் வந்து, அம்மா தாயே! உன் காலிலிருந்த விலங்கு எங்கே? யாவர் முறித்தவர்கள்? சொல்லுமம்மா என்று நயத்தோடு கேட்டான், தாய் சொல்லுகிறாள்.

அப்பா குமாரகா நீலமேகா! நான் இந்த வானர சிரோமணியானவர் காலில் விழுந்தேன். அவர் தயவு செய்து என் விலங்கை வாங்கிவிட்டார் என்றும் மகனைப்பிடித்து இருவரும் அனுமாருடைய காலிலே

விழுந்து கும்பிட்டு அடா பயப்படாதே, இவர் நம்மை இரட்சிக்கவந்த ஆண்டவனடா என்றுசொல்லி அனுமாரைநோக்கி எங்களை இரட்சியுமையாவெனச் சொல்லினர். ஆஞ்சநேயர் களிகூர்ந்து உங்களிருவரையும் இரட்சிக்கவும் மயிலிராவணனைப் பட்சிக்கவும வந்து தோன்றினேன். நீலமேகனுக்குப் பட்டங்கட்டி அந்த ரூபவதியை மணஞ்செய்துவிட்டுப் போகிறேன். இதோ அபயவஸ்தம் பிடிபிடியென்று தூரதண்டிகை கையில் போட நீலமேகன் சந்தோஷமெய்தியிருக்க, அனுமார் நீலமேகனை அருகிலழைத்து அப்பா! இராமலட்சுமணனை இங்கிருககாநின்ற பத்திரகாளி கோயிலுக்குப் பலியிடப் போகின்றனும். அக்காளிகோயில் எங்கே இருக்கிறது? காண்பியுமென்று ஆஞ்சநேயர் கேட்க, நீலமேகன் சொல்லுகிறன்: கேளும ஆஞ்சநேயரே! அந்த பத்திரகாளிகோயிலிலே அவர்களிருவருமிருக்கிருர்கள். அந்தக் கோயிற்புறமானது மகா உன்னதமாயிருக்கும். அதோ பார்த்தீரா தோன்றுகிறது. அதில் இராமலட்சுமணன் இரண்டுபேரிருக்கிருர்களென்று சொல்லி, பின்னும் ஐயா! அவர்களைப் போய்ப் பார்தத வுடனே நீர் இராமலட்சுமணன் அகப்பட்டாரென்று சந்தோஷித்து இனி மயிலிராவணன் தான் போனுலென்ன, நமக்கு இராமலட்சுமண ளகப்பட்டுவிட்டனரென்று களிப்பெய்தி சும்மா போய்விட்டாலெப்படி? விலங்கைத் தறித்துவிட்டு எஙகளைப் பரதேசியாக விட்டுப்போனுலெப்படி? அப்புறம் மயிலிராவணன் எங்கள் இரண்டுபேரையும்வெட்டிபபோடுவானே? அனுமந்தா! ஆனபடியினுலே எனக்கு வெகு பயமாயிருக்கிறது. சுவாமி! நானொரு யோசனை சொல்லுகிறேன் கோபஞ் செய்துக்கொள்ளவேண்டாம். நீர பட்டங் கட்டுகிறேன என்றீரே? எனக்குப் பட்டமும் வேண்டாம், இதோ இநத மயிலிராவணனை முன்னம் சங்காரம் பண்ணிவிட்டு அப்பால் இராமலட்சுமணனை எடுத்துக்கொண்டு உமக்குச் சரிபோனவனுக்கு இந்தப் பாதாள யிலங்கையைப் பட்டங்கட்டிவிட்டு அப்பால் நீர்போகலாமென்று சொன்னுன்.

அப்பால் அனுமார் சொல்லுகிறா: தம்பி நீலமேகா! நீ இப்படி சமுசயப்படவேண்டாம்; நானுனக்கு

அபயஸ்தங் கொடுத்தது தவறுவேனே? தப்பத்தக்க தில்லை. இந்த நாழிகைக்கு நம்பிக்கை சொல்லுகிறேன் இதோ யிருக்கிற ஆகாயவாணி பூமிதேவி சாட்சியாக நானுனக்குப் பயப்படாமல் வாழப பட்டங்கட்டி விவாகஞ் செய்து, பின்பு உன்னிடத்தில் விடைபெற்றுக் கொண்டு போகிறேனென்று சொல்ல, நீலமேகனும் தூரதண்டிகையும் தைரியத்துடனே யிருக்க, மற்றுஞ் சொல்லுகிறார்கள். வாரும் ஆஞ்சநேயா! எங்களுக்கு மயிலிராவணனுடைய கெடுதி இப்படி சொல்லத்தக்க தாக விருக்கிறது அனுமந்தசுவாமி யென்று சொல்லி விட்டு இனிமேல் சுகமாய் பத்திரகாளி கோயிலுக்குப் போம். நாங்களும் கூட வருகிறோமென்று சொல்ல, அனுமார் நீங்கள் இரண்டுபேரும் என்கூட வரவேண்டாம். ஏனென்றால் யுத்தத்தில் நான் சண்டை செய்யும் போது பயப்படுவீர்கள். ஆதலால் இந்த மண்டபத்தில் தானே பத்திரமாயிருங்கள் என்று சொல்ல, நீலமேகனும் தூரதண்டிகையும் அனுமாரைநோக்கிச் சொல்லுகிறார்கள். கேளும் அனுமந்தா! நீ பத்திரகாளிகோயிலுக்குப் போயிருக்கிற சமயத்தில் மயிலிராவணன் ஆள்களையனுப்பி எங்களைப் பிடித்து வெட்டிப்போட்டால் அப்போது எங்களுக்கு ஆதரவில்லையே. நீர் போய விட்டால் இவ்விடத்தில் நாங்கள் எப்படி யிருப்பது என்று சொன்னார்கள்.

அவ்வார்த்தைகளை அனுமார் கேட்டு இருவரையும் பார்த்துச் சொல்லுகிறார். வாரும் பிள்ளாய நீலமேகா! அவ்வாறே இங்ஙனம் யாராகிலும் வந்து உங்களைப் பிடிக்கவந்தால என்னை நினைத்துக் கூப்பிடும். அப்போது நான்வந்து அதம்பண்ணிப் போடுகிறேன் என்றார். ஆனால அவ்வாறு நல்லது போமென்று சொன்னார்கள். அனுமார் விடைபெற்றுக் கொண்டு அதிசீக்கிரமாக பத்திரகாளி கோயிலுக்கு வந்தார். அங்ஙனம அக்காளிகோயிற் கதவு சாத்தப்பட்டு இருப்பதைப் பார்த்து ஐந்துவிரலைக் குவித்து இறுக்கி கெட்டியாகப பிடித்திழுத்து ஓங்கி ஒருகுத்து குத்தினார். அங்கிருந்த பதினாயிரம் சூலவண்டி யிழுக்கத்தக்கதான பொற்கதவானது பொடிப்பொடியாய் போய்விட்டது. உடனே அங்கேயிருக்கப்பட்ட அதிசயத்தைச் சொல்லு

கிறேன் வினவக் கேட்டருளுங்களென்று நாரதர் கௌதமருக்குச் சொல்லுகிருர்.

அந்த மாகாளிகோயிலிலே ஆயிரக்கால்மண்டபம் அபிஷேகமண்டபம்-எண்ணெயாடுமண்டபம் - பளிங்கு மண்டபம்-முத்துமண்டபம்-வண்ணமண்டபம்-திண்ண மண்டபம்- கல்மண்டபம் - மரகதமண்டபம-கோமேதக மண்டபம் - வச்சிரமணடபம்-பச்சைமண்டடம - புட்ப மண்டபம-வயிரமண்டபம்-பவளமண்டபம-தாளகமண் டபம்-பதுமையண்டபம் - புதுமைமண்டபம்-மதுரமண் டபம் - பிராகாரங்கள்-சாலைகள - துஜஸ்தமபம்-கோபுர ஸ்தூபி-கொடிககமபம இப்படி நானுவித அதிசயத் தைப பார்த்து தேவர் மனதுவாடி மூலஸ்தானத்துக் கதவு மூடியிருப்பதால் கோபநீடி உடனே தமதுகையில் ஜாடி உடைததுவிட்டார். அப்படி உடைத்துப் பாாக்கு மளவில அங்ஙனம் சண்டி-ஜாமுண்டி-சாமளை-காளி-வேதாளி - உமை-மாதங்கி - தாருகா-போபெற்றதையல்-பைரவி-சீதை-ஆரணி - நாரணி-தஞ்சலணங்கு - ஐயை-முக்கண்ணி-மதுபதி-ஆளி-யுததி-மாயை-யோகினி-யிடா கினி-வலவை-குறமகள் இப்படி முப்பத்துமூனறுபெயர் படைதத பத்தரகாளியானவள் வாளைகொடிபோலே நீணட பல்லும சனனல் பின்னல் சடையும மழுப் படையும் புலித்தோல் உடையும அகோரரூபமாக விருந் தாள். சநதமினி சஞ்சப்பெண்முதலியபோகள் ஊழியம் பண்ணுகிறதைப் பார்தது கிட்டேசென்று அவளருகில வைததுருககிற பெட்டியைக்கண்டு மகிழ்ச்சிகொண்டு திறந்துபார்க்கவெய்தி இப்படியா செய்திமயன்று கருதி அநதப் பெட்டியை மெளள அசையாமலெடுத்து மேல மூடியைத திறநதுபாாததுவிட்டார். இராமலட்சுமணுள் நிாச்சேஷ்டையாக மயலிராவணன மந்திரிதத கட்டினு னுலும் மாயாசூததரத்தாலும் கைகால அசையாதிருப்ப தைப பார்ததிருநதாா. இருவா உடம்பெலலாம் தடவிப் பார்ததுத் தட்டி எழுப்பலாகாதெனக் கருதி இராமலட் சுமணுள மயககந் தெளிந்து விழிதது பார்க்க வேண்டு மெனறு அனுமாா ஸ்தோததிரம பண்ணுகின்ருா.

ஓ அகிலாண்டகோடி பிரமமாண்ட நாயகா! அனுத ரட்சகா! ஆபத்பாநதவா! க்ஷீராப்திநாதா! சீதாசமேதா! பக்தவதசலா! பரந்தாமா! பன்னகசயனு! பத்மநாபா!

பங்கயப்பாதா ! ஆதிவராகா ! அச்சுதா ! கோவிந்தா ! கோபாலா! இராமச்சந்திரா! சோமசுந்திரா! என்று துதித்தார் மதித்தார். நித்திரையோ ஏழைபங்காளா! இருதயத்தோளா ! இராமலட்சுமணுள் எண்வகைக் குணளா! என்று கூப்பிடும்போது அங்ஙனே சற்று இராமச்சந்திரக்கடவுள் குவளைக்கண் விழித்து பவள வாய் திறந்து சொல்லுகின்றார். வாரும் அனுமாரே! நாமிங்கேன் வந்தோம்; இதேது பிள்ளா யனுமந்தா! கோயிலும் கோபுரமும் மண்டபமு மாயிருக்கிறது இது எவ்விடம்? இது யார் தேசம்? இது என்ன ஸ்தலம்? இங்கு ஏன் வந்தோம்? விபரமாகச் சொல்லுமென்று கேட்க, அனுமார் சொல்லுகிறார். ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியே! ஜகத் குருவே! இந்த மயிலிராவணன் பாவி என் வால்கோட்டையை ஏதோ ஒருபாயம்பண்ணி ஏமாற்றி உங்களை எடுத்துவந்துவிட்டான். இதனாலே நான் உம்மைச் சேவித்து அழைத்துப்போக வந்தேன் என்று சொல்லியருளினார். இவைகளையெல்லாங்கேட்ட இராம மூர்த்தி கண்ணைத்திறந்தவர் மறுபடியும் மயிலிராவணன் அபிமந்திரித்த மந்திரோச்சாடனத்தின் மாய்கையினால் இவர் கண்ணைத் திறக்கப்படாமல் மூடிக்கொண்டு மறுபடியும் நித்திரை செய்யலுற்றார்கள். அதை அனுமார் பார்த்து அதிக விசாரப்பட்டு இனி நாம் சும்மா யிருக்கப்படாதென்றெண்ணி, தீர்க்காலோசனைபண்ணி இப்போது நாழிகை பதினைந்தாச்சுது, இனி தாமதஞ் செய்தால் கெடுதி நேரிடும். இராமலட்சுமணரை இந்த விடத்தில் வைத்திருக்கக்கூடாது. முன்செய்தவாறு போல் இப்போது மயிலிராவணன் மதியயங்கித் தியங்க மோசம் பண்ணுவான், இவர்களை ஒருவிடத்தில் பத்திரப்படுத்திவிட்டு பின்பு இராட்சதர்களோடு சண்டை பண்ணவேண்டுமென்று எண்ணி நினைத்துத் திடமொன்று இராமலட்சுமணரை மூன்று பிரதட்சணம் பண்ணி நமஸ்கரித்துக் கும்பிட்டு பெட்டியை அஸ்தத்தில் அசையாமல் எடுத்து அந்த மயிலிராவணன் பட்டணத்தைவிட்டு எண்பது கோட்டைகளையுந் தாண்டி அப்பாலேபோய் அங்கேயிருக்கும் ஓர் மலையைப் பார்த்தார். அம்மலையில் ஓர் மண்டபமிருக்க அம்மண்டபத்தினுள்ளே இந்தப் பெட்டியை இறக்கிவைத்து அதற்

குள்ளே ஒரு குகையைப்பார்த்து அந்தக் குகையிலே இராமலட்சுமணனைக் கொண்டுபோய் வைத்து பூமியைப்பார்த்து அநுமார் சொல்லுகிறார்.

கேளுமம்மா பூமாதேவியே! உன்னுடைய புருஷனவர் இதோ யிருக்கிறார்: இந்த மயிலிராவணன் கையிலே அகப்பட்டபடியினாலே நான் எடுத்துவந்தேன்; உனது மாப்பிள்ளை இப்படி யிருக்கலாமா? உன் தங்கை இலங்கையிலே அசோகவிருட்சத்தின் கீழே யிருக்கிறாள். இனிமேல் இராமலட்சுமணன் போய் இராவண சம்மாரஞ்செய்து உன் தங்கையை விடுவிக்கப் போகிறார். ஆனபடியினாலே நான் மயிலிராவணனுடனே யுத்தம்பண்ணி அந்தச்சண்டாளனைக் கொல்ல வேணும். பின்பு வந்து இராமலட்சுமணனை எடுத்துக் கொண்டு போகிறேன். அந்தமட்டும் நீ வைத்திருந்து காப்பாற்றி ஒப்புவிக்கவேண்டுமென்று சொல்ல, பூமிதேவி அநுமாரைப் பார்த்து வாரும் ஆஞ்சநேயப் பெருமாளே! இதோ இவ்விடத்தில் வையும். பத்திரமாக பாதுகாக்கிறேனென்று சொல்லுமாப்போல் பூமியானது திடீரென்று வெடித்தது. அநுமார் புகழ்ந்து அந்த வெடிப்புக் குகையிலே வைததுவிட்டு பத்திரமென்று சொல்லி மயிலிராவணன் பட்டணத்திற்கு வந்துவிட்டார். உடனே பூமிதேவியும் நாம் இப்படியிருந்தால் கெடுதிநேரிடும். இராமலட்சுமணனைக் காண்பித்துக் கொடுக்கலாகாதென்று வெடிப்புக குகையை மூடிக்கொண்டாள்.

இந்தக்கதை யிவ்வாறிருக்க, அங்கே கடகன் என்கிற ராட்சதனும் அவன் பெண்சாதியும் அநுமார் வாலிற் கட்டுப்பட்டு சரணம்பண்ணி விடுவிந்துக் கொண்டு வீடுசேர்ந்து மறுபடியும் பெண்சாதியுந் தானுமாக மன்மதக்கிரீடை நடத்திவரும்போது கடகனைப் பார்த்துச் சொல்லுகிறாள். வாரும் பிராணநாயகா! அறிவுக்குறவா! நீர் மயிலிராவணனுடைய உப்புஞ் சோறுந் தின்று அவனுக் கிரண்டகந் தேடலாமா? சத்திராதியான குரங்குக்குப் பயந்து ஓடலாமா? இனிஉமது அரசனிடத்தில் நாடலாமா? வீரமில்லாத நீர் என்னிடத்தில் கூடலாமா? அன்னமிட்டவன் பெண்சாதியை கன்னமிட்டவாறுபோல் நீர் செய்துவிட்டீர். அல்லாமலும்

நீர் அவனோடுபோய் சொல்லாமலு மிருப்பது தர்ம சாஸ்திர நெறிக்குத் தகுதியல்லவென்று அந்தப் பெண்பால் நற்புத்தி விளங்கக் கூறினாள். கடகன் கேட்டு இதோ பாரடி போய்ச் சொல்லுகிறேனென்று புறப்பட்டுச் சீக்கிரமாகக் கோட்டவழியிலே அனுமாருக்குத்தெரியாதவனாகத் திரும்பிப் பார்த்துக்கொண்டு மயிலிராவணனுடைய ஆசாரவாசலில் நுழைந்தான். அவ்விடத்தில் பன்னீராயிரங் கோடி ராட்சதர்கள் சத்துருபயமில்லாமல் ஆயுதங்களைத் தலைக்குயரமாக வைத்து நித்திரை பண்ணுகிறார்கள். அவர்களைக் கடகன் கண்டு கையிலே தட்டி என்ன தூக்கம் தூங்குகிறீர்கள். அதோ அனுமார் வரப்போரு றென்று சகலமானபேருக்குஞ் சொல்லி, அசுரனென்பவனை யழைத்து மயிலிராவணனுக்கு இந்தச் சங்கதியைச் சொல்லென்று கடகன் சொல்லியனுப்ப அவசரக்காரனான அசுரன் மயிலிராவணக்குச் சொன்னான்.

அப்போது மயிலிராவணனும் அவன் பெண்சாதியும் சப்ரகூடமஞ்சத்தில் சரச அமளி நடத்தும்போது பெண்சாதி நாயகனை நோக்கி ஆண்டவனே! உமது மார்பழகுபோல் ஒருவருக்கு மில்லையென்றாள். நாயகன் சொல்லுகிறான் பெண்ணே! உனது ஒளிமுகம் போல் உலகத்தில் ஒருவருக்கு மில்லையென்று மடவிறுகச் சேரத்தழுவி சரசசல்லாப உல்லாச அமளி நடத்தியிருக்கிற சமயத்தில் மயிலிராவணன் காதிலே நாராசங் காய்ச்சி விட்டதுபோலும் பச்சை மரத்திலே வயிர ஆணி கடாவினாற்போலும் புகல மயிலிராவணன் கேட்டு கிருஷ்ண சர்ப்பம்போற் சீறி சீக்கிரமாக வெழுந்து கொலுக்கூடத்தில் வந்து உட்கார்ந்து, அப்பா கடகா! வாரும். அனுமான் வந்தானென்றாயே? துலாயந்திரத்திலிருந்த பூபதியான இராட்சதாளெப்படி அனுமாரை விடுவார்கள்? அவர்களை யிங்கே யழைத்துவா; ஒரே வெட்டாக வெட்டுகிறேனென்றான்.

கடகன் சொல்லுகிறான் வாரும் எங்களரசனே! வெற்றிமுரசனே! இலங்கைக் கதிபதியே! நீர் வெட்டுகிறபரியந்த மிருந்தாலல்லவோ அவர்களை அனுமாரென்னுங் குரங்கடித்துக் கொன்றுவிட்ட தென்றான். மயிலிராவணன் வாசிமுகன் முதலிய மந்திரிகளைக் கூப்

பிட்டு யோசனை செய்யவேண்டுமென்றுசொல்ல, கடகன் கூறுகிருன். ஐயா நானொருவன் தவிர வாசிமுகன் முதலியபேர்களும் இறந்துவிட்டார்களென்று சொல்ல, மயிலிராவணன் அப்படியாவென்று கருவி வாளையுருவி மந்திரிகளிடம்மருவி இனிமேல் நடக்கத்தக்கதான காரியம் என்னவென்றுகேட்டு கடகனைப்பார்த்துச் சொல்லுகிருன். கேளும் பிள்ளாய்கடகா! என் தங்கையான தூரதண்டிகையைத் தண்ணீருக்குப் போகவனுப்பினேன். அந்தப் பாவி அழைத்துவந்தாற்போ லிருக்கின்றது. இல்லாவிடில் அனுமா ரிங்கேவரத் தீரமுண்டோ? நல்லது எல்லாவற்றிற்கும் அந்தத் தூரதண்டிகையும் நீலமேகனையும் போட்டடைத்து வைத்த காவற் கிடங்கிலே யிருக்கிருர்களோ? இல்லையோ? அதைச் சற்றே பார்த்துவாவென் றனுப்பினன். கடகன் அதிசீக்கிரமாய ஓடி அந்த காவற்கூடத்தைச் சுற்றிப் பார்த்தான். அப்படி பார்க்கும்போது கதவு படுசூரணமாய்ப் போயிருப்பதையும் விலங்கு தூளாயிருப்பதையும் பார்த்துச் சீக்கிரமா யோடிவந்து மயிலிராவணனுக்கு நமஸ்காரஞ் செய்து சொல்லுகிருன். கேளுமையா சுவாமி! உமது காவற்கூடத்தி லிருவரும் அவ்விடத்திலில்லை யென்று சொன்னர். மயிலிராவணன் அப்பாவென்று சீக்கிரமாக ஆக்கிரமித்து பராக்கிரமமீறி வியாக்கிரமம்போலச் சீறி கடகனைக் கண்டு இருவரையும் இப்போதே வெட்டிப்போட்டுவாவென்று கடகனுக்கு விடைகொடுத்தனுப்பி தானும் எழுந்திருந்து இராமலட்சுமணரைப் பதரகாளிகோயிலிலே வைத்தோமேயென்று அந்தப் பெட்டியைப் பார்க்க வந்தான். அங்கே பெட்டியில்லாதபடியால் மயங்கிதியங்கி என்னசெய்கிறதென்று ஆலோசித்துக்கொண்டிருந்தான்.

இவனிப்படியிருக்க கடகன் அதிசீக்கிரமாகப்பட்டாகத்தியை யுருவிக்கொண்டு நீலமேகனையும் தூரதண்டிகையும் வெட்டவேண்டி அவர்கள் எங்கேயிருக்கிருர்களென்று கோட்டைகளைத் தாண்டி மூலைக்குமூலை தேடி இராஜமார்க்கத்து வீதியிலே வரும்போது அவனுக்கெதிராக அனுமார் வரக்கண்டு பயங்கொண்ட கடகன் கிடுகிடுவென்று நடுக்கி யொடுங்கி இனி யெப்படி தப்பியோடுகிறதென்று அதிகவிசாரத்துடன் பட்டாகத்தியை

தெருவிலே எறிந்துவிட்டு ஒரு காதிலே நுழைந்து குட்டிச் சுவர்களின் வெளிகளைத் தாண்டி விழுந்து எழுந்து நான்கு மூலையும் பார்த்து அனுமார் கண்ணிலகப் படப் போகிறோமென் றெண்ணி பயந்து அயர்ந்து போரிற் புறமுதுகுகாட்டி ஓடுவதுபோல் ஓடி மயிலி ராவணனது கோயிலுக்குச் சென்று பார்க்க, கதவு இடிந்து முறிந்து மண்ணுய படிந்து படுசூர்ணமானதைப் பார்த்து இதேது மோசம் வந்தது அதிசயமாயிருக் கிறது. பெட்டியை அனுமாரென்னுங் குரங்கு எடுத் துக்கொண்டு போய்விட்டது. இனி என்ன செய்வோம். பத்திரகாளியும் அவன் கூப்பிட்ட விடத்திற்குப் போனு ளோவென்று சந்தேகித்து அந்த மாகாளி முகத்தைப் பார்த்தான். பார்த்தவிடத்திலே பத்திரகாளி அகம் நாணி முகங்கோணி விசனமடைந்திருப்பதைப் பார்த்து சரி தான் பத்திரகாளியும் அனுமாரோடு போய்விட்டா ளென்று எண்ணி யோசனை பண்ணி இனி அரண் மனைக்குப் போகவேண்டும்; அனுமானனவன் இவ் விடத்திலாவது ஒளித்திருந்து வழிமறித்துக்கொண்டு அதம்பண்ணுவானோ வென்று நாலுமூலையும் பார்த்து வாயுவேக மனோவேகமாய்ப் பறந்து அரண்மனைக்கு ஓடிவந்தான். அப்போது கடகனைப் பார்த்து அடா வாடா கடகா! நீ போயிருந்த காரியமெப்படியிருந்ததோ அப்படியே நான் போனகாரியமு மிருந்ததென்று சொல்லி உடனே மயிலிராவணன் அவசரக்காரரை அழைத்துச் சொல்லுகிறான். அப்பா வேவுகாரர்களே! நீங்கள் துரிதமாய்ப் போய் அந்தத் தூரதண்டி நீல மேகன் இருவரும் எங்கே போயிருக்கிறார்கள்? அதி சீக்கிரமாகப் பார்த்துவாருங்களென்று சொல்லியனுப்ப, அவர்களவ்வாறே அரசனசொற்படி பாதாள இலங்கை ௫00-தெருவீதியுந் தேடிவரும்போது நீலமேகனுந் தூர தண்டிகையம் அனுமாரும் பேசிக்கொண் டிருப்பதைப் பார்த்துவிட்டுப் பயந்து நடுநடுங்கிக்கொண்டு ஓடி மயி லிராவணன் சபையிலே வந்துசேர்ந்து சொல்லுகிறான்: வாரும் பாதாள இலங்கேஸ்வரா! கேளும். அதோ அனுமாரும் நீலமேகனும் தூரதண்டிகையும் பேசிக் கொண்டு வெகு அன்னியோன்னியமாக யிருக்கிறார்க ளென்று சொன்னார்கள்.

அப்போது மயிலிராவணன் வெகு கோபத்துடன் ஆயிரம் இராட்சதப் படைகளைக் கூட்டி நீலமேகன் தாரதண்டிகை யிரண்டுபேரையும் பின்கட்டாகக் கட்டி பிழுத்து வாருங்களென்று சொன்னான். அப்படிச் சொல்லிய மயிலிராவணன் சொல்லைத் தவருது அந்த ஆயிரம்பேரும் ஏககாலத்தில் கடல் பொங்கியவாறு போலத் திரண்டுநண்டு அவரவர் ஆயுதங்களையெடுத்து அணிந்து வில்லுகளைக் கையிற்றுங்கி அம்புறுத்தூணி யைமுதுகிலோங்கி ஆயுதபாணிகளாகி அந்த ஆயிரம் போகளுந் தெருவீதியில் தேடிவரும்போது, அனுமார் ஒரு மூலையி லொளிததிருந்தார். இராட்சதர்கள் வந்து விட்டார்கள். நீலமேகனுந் தூரதண்டிகையும் இராட் சதர்க ளென்னசெய்யப்போகிறார்கள் பார்ப்போமென்று இறுமாந்திருக்க, உடனே அரக்காகள்வந்து இரண்டு பேரையும் பிடிக்க நெருங்கி அருகில்சென்று அடிவாடி தூரதண்டிகையே! அடாவாடா நீலமேகா! எங்கள் மயிலிராவணனுடைய சத்துருவைக் கொண்டுவந்து நமது கோட்டைக்குள் விட்டுவிட்டீர்களாவென்று அதட்டி வுருவி வெருவி முகங்கருவி கோபம்பெருகி கடுகிப் பிடியுங்கள் முடுகி அடியுங்கள் சேர்த்துகட்டுங்கள் குறி பார்த்துத் தலையை வெட்டுங்களென்றார்கள்.

இவ்வாறு நானுவித வார்த்தையாடினார்கள். இது களைக் கேட்ட நீலமேகனும் தூரதண்டிகையும் கிடு கிடுத்து பயமெடுத்து அஞ்சி மனது துஞ்சி ஆஞ்ச நேயா! அனுமந்ததூயா! ஆபத்பாந்தவா! அனுதாட் சகா! அச்சுதனோடு போந்தவா! சத்துருக்களிடத்தில் காட்டிக்கொடுத்தீரே. இப்படியுஞ் செய்யலாமா? வானர நாமா! மருவார்த்தாமா! வடிவுறு சோமா! நெடிபெறு ராமா! காக்கக்கடவீர் ஏழைபங்கா! என்னை யாளென்று முறையிட அவ்வார்த்தையை யனுமார் கேட்டு அதி சீக்கிரமாக ஆகாயத்தி லெழும்பி குபீலென்று அரக்கர் படைமேல் விழுந்து யானைக்கூட்டத்திலே சீரிய சிங் கம் புகுந்தவாறுபோல் இராட்சதசேனையை ஒவ்வொரு வராக கால்களைப்பிடித்துக் கரகரவென்று சுழற்றி ஆகா யத்தைநோக்கி மண்ணிற்றுக்க சேவகர்கள் பார்க்கத் தனது வஞ்சந்தீர்க்க யாவரையுங் கசக்கி எமபுரஞ் சேர்த்தார்.

மாண்ட அரக்கர்களி லொருவன் பிழைத்து மயிலி ராவணனிடத்தி லோடிவந்து விரைந்து ஓ! ஓ! என்று விரைந்து சொல்லுகிறான். ஆண்டவனே! மகுடாபி ஷேகம் பூண்டவனே! இலங்காதிபதியே! ஆயிரம்பேர் போனோமே; அத்தனைபேரை யனுமார் சரிபடுத்திவிட் டார் என்றுசொல்ல, மயிலிரர்வணன் தீர்க்காலோசனை செய்து அதிககோபத்துடன் சகல ராணுவங்களையுங் கூட்டி, கடகனை நோக்கி, அடா வாடா கடகா! உக்கிர சேனனை யனுப்பி ஆயிரங்கோடி குதிரைவீரர் இரண்டா யிரங்கோடி யானைவீரர் ஒட்டகவீராகள் அவரவராயுதங்க ளுடனே ஆக்யாபித்த உ-ரதங்களைப்பூட்டி போர்க்களத் திலே நாட்டுமென்று சொல்லியனுப்ப கடக்ன் அப் படியே நல்லதென ஓட்டமாக ஓடி அச்சேனாதிபதிகளுக் குச் சொல்லி மயிலிராவணன் பக்கத்தில் வந்து சேர்ந் தான். உடனே யாவரும் யுத்தகோலத்துடனே வந் தார்கள். மயிலிராவணன் தனது தேரைச் சிங்காரித் துக்கொண்டு வரச்சொல்லி, ஆயுதபாணியாகத் தேரின் மேலேறினான். அவனது சேனாதிபதிகளாகிய உக்கிர சேனன்-தசமவீமன் - காலதெட்சகன்-வித்தியசமன்-உக் கிரசேனன் - சுக்கிரன் - இருமாலி-சம்புமாலி -அக்கினி கேது - தூமகேது -நாமகேது-தீரகாலன்-கடராட்சதன்- அம்பன்-நிகும்பன் - மந்தரன்-முதலான சுத்தவீரர்கள் புடைசூழச் சத்துருக்கள் தாழ முத்துக்குடைகள் கவிய மாற்றலர் காங்கள் சிரமேற் குவிய சிங்கக்கொடி பறக்க மயிலிராவணனவன் சகல சேனைகளும் புடைசூழும் படி பாதாளம்விட் டிறங்கினான். இப்படி யிருப்பதை யனுமார் பார்த்து மகாகோபத்துடனே விஸ்வரூபம் எடுத்துக்கொண்டு இராக்ஷசக் கூட்டத்தில் விழுநது தாறுமாருய் நுறுங்கடிக்க அப்போது இராக்ஷதர்கள் எலலாம் அனுமாரைச் சுற்றிக்கொண்டு ஈட்டி எறியம்பு பாண முதலிய ஆயுதங்களை யெறிந்தார்கள். இருபதி னயிரந் தேரின்பேரிலே யிருக்கின்ற மந்திரி பிரதானி சேனாபதிகள் தங்கள் தங்கள் வில்லுகளை வளைத்து ஆயு தங்களைத் தொடுத்து அனுமார்பேரிலே சரவருஷம் பொழிந்தார்கள்; ஆயிரங்கோடி பாணம் வருஷித்தார் கள்; நூறு கோடி மதயானைகளும் இருப்புலக்கையைப் பிடித்துக்கொண்டு கரகரவென்று சுழற்றிவிட்டெறிய

ஒருவெள்ள மிராக்ஷதாள் சகல ஆயுதத்தினாலுமடிக்க அனுமாரானவர் பார்த்து தனது வாலை விஸ்தீரணமாய் வளைத்து வால்கோட்டையாகத் தன்னைச் சுற்றிலும் கட்டிக்கொண்டு அககோட்டைக்குள்ளே சட்டதிட்டமாய் காலை மடித்துக்கொண்டு உட்காரந்தார். அப்போது சகல இராட்சதர்களும் இரதகஜ துரகபதாதிகளும் அக்காலத்தில் அனுமாருடைய வால்கோட்டையின்பேரில் மூப்பத்திரண்டாயுதங்களையும் பிரயோகஞ் செய்து சின்னாபின்னமாயடிக்க அனுமாரானவர் யோசனைசெய்து நாமிப்படி உட்கார்ந்திருந்தால் பத்துநாளாகிலும் இவ்வண்ணமே இராக்ஷதர் ஒன்றுக்கு மஞ்சாமல் சண்டை செய்துக்கொண்டிருப்பாரகள், ஆகையால் நாம் எழுந்திருந்து சண்டை செய்யவேண்டுமென்று தனது வாலைப் பிரமாண்டமாய் வளைத்து இராக்ஷதரை வாலினாலும் கையாலும் மெய்யாலும் பல்லாலும கல்லாலுமடித்து உதிரத்தைக் குடித்தும் ஆத்துமத்தையும் முடித்தும் தேர்களை யொடிததும் யானைகள் சேனைகள் ஒட்டகங்கள் கரடிகள் புலிகள்யாவற்றையும் அதமாக்கிப் பொடிப்பொடியா யுதைத்து தும்சப்படுத்தி பிரளயகாலாக்கினி வுருத்திரனைபபோல் ஆஞ்சநேயரடிக்க சகல சேனையும் அடிபட்டு மூலையிலோடுவதைக் கண்டு கதாசிங்கன் ஓடுகிற பேரைத தடுத்து ஆஞ்சநேயரைக் கொல்லுகிறேன் யானிவனை வெல்லுகிறேன் நீங்கள் பயப்படாமலிருந்து வேடிக்கை பாருங்களென்று சொல்ல, ஆஞ்சநேயர் பேரில சகல சேனைகளும் வந்து அநேக பாணங்களைப் பொழிந்தார்கள். அப்போது அஞ்சநேயர் தனது வாலை கதாசிங்கனுடைய இரண்டு காலின் கீழ் புகவிட்டு சுற்றிக்கொண்டு கீழே யிழுத்துவிட்டு நடுமார்பில் மிதித்தார். மிதிதத மாத்திரத்திலே அந்தக் கதாசிங்கன் நாறு நீர்க்குழி பதுங்கி நாறு கையும் ஒடிந்து கண் வெளியே பிதுங்கி குடல்கள் நசுங்கி எலும்புகள் முறிந்து எமபுரததை யடைந்தான்.

அப்போது வித்திய சிம்மனானவன் மனம் பதைத்து கோபம்மீறி நாகத்தைப்போல் சீறி அனுமாரைப் பார்த்து அடா ஆஞ்சநேயா! அனுமந்தராயா! நில்லு கதாசிம்மனை அடித்து மாய்த்துவிட்டோமென்று கர்வங் கொள்ளாதே, வீணாகத் துள்ளாதே. துள்ளியமாடு

பொதிசுமக்குமா? என் முன்னே சண்டைக்கு வாடா? இப்போதே சங்கரிக்கிறேன் என்று ஆண்மைகூற, அப்போது அனுமார் வித்தியசிம்மன்பேரில் எதிர்த்தார். வித்தியசிம்மன் வில்லைவளைத்து அனேக பாணங்களைப் பிரயோகஞ் செய்தான். கோபத்துடனே துரிதமாயோடி தேரின்பேரிலிருக்கிற வித்தியசிம்மனைப் பிடித்து தமது கையினால் நோக்கி யறைய வித்தியசிம்மன் மூர்ச்சையாய்த் தேரின்பேரிலிருந்து கீழே விழுந்து விரைவாக எழுந்து ஓட்டம் பிடித்தான். அவன் ஓடுவதைக் கண்ட கடகரோமன் என்கிறவன் ஆஞ்சநேயரோடெதிர்த்து யுத்தஞ்செய்தான். அவனையுந் தன்னுடைய கையா லறைந்தார். அந்த அறையினால் கடகரோமன் இரத்தங்களைக் கக்கிக்கொண்டு கீழே விழுந்து எமபுரத்தைச் சேர்ந்தான்.

பின்பு நான்காம் வீட்டிலே பிரவேசிக்க அவ்விடத்திலே காலதட்சனென்பவன் அதிசீக்கிரமாய் வில்லிலே பாணங்களைப் பூட்டி பிரயோகஞ் செய்தான் அப்போது ஆஞ்சநேயர் அநேக ஆயுதங்களினால் யுத்தஞ்செய்தபின்பு தனது வாலை கீழேபுகவிட்டு தேரின் பேரிலேயிருக்கிற காலதட்சனைக்கட்டியிழுத்து ஆகாயத்தில் தூக்கி கரகரவென்று சுழற்றி நிலத்திலடிக்க அவனும் எமபுரத்தை யடைந்தான். அதைக்கண்ட உக்கிரசேனன் வக்கிராஜன் இவ்விரண்டுபேரும் கண்களில் தீப்பொறி பறக்கக் கோபித்து, வில்லைவளைத்துக் குணத்தொனி செய்தார்கள். அப்போது அனுமார் அதிசீக்கிரமாகயெழும்பி குபீலென்று உக்கிரசேனனுடைய தேரின் பேரில் ஒருகாலும் வச்சிரசேனனுடைய தேரின்பேரில் ஒருகாலும் வைத்து வீராவேசத்துடன் மிதித்துக் கொண்டு இருவர் கழுத்தையும் இரண்டு கையிற்பிடித்து அங்குமிங்கும் அசையாமலழுத்த இராட்சதாள் யாவரும் பிதுர்கலங்கி அவரவர் கழுத்தையும் இறுக்கிப் பிடித்து இரத்தம்பீறி விஷங்களைக் கக்கிக்கொண்டுவிழ அம்பலப்படுத்தி யாவரையும் எமபுரஞ்சேர்த்துப் பின்பு எழாம்வீட்டில் போகிறபோது தீரசிம்மனென்பவன் ஆஞ்சநேயரைப் பார்த்து அட்டகாசஞ் செய்தான். அடா வானரா! உனக்கு வாலிருக்கிறதென்றல்லவோ கர்வம் அடைந்திருக்கிறாய். இதோபாரென்று உன்னைப்போல்

நாவானது அதிக பெரிதாயிருக்கின்றது: இந்த நாவி ஞலே உன்னைக் கட்டிப்பிடித்து விழுங்கிவிடுகிறேன் என்று ஆண்மைகூறி இருவரும் மல்யுக்கஞ் செய்ய, அப்போது ஆஞ்சநேயர் பின்னடைய தீரசிம்மனென வன் ஆஞ்சநேயரைப் பிடிக்கவேண்டுமென்று தனது நாவை நீட்டினன். அனுமார் தனது கையால் ஐந்து சுற்றுகச்சுற்றி யிழுத்து காகரவென்று ஆகாயத்திலே சுழற்ற தீரசிம்மன் நாவானது அடியோடே அறுந்து விழுந்து எமபதிக்குப் போய்ச்சேர்ந்தான்.

பின்பு ஆஞ்சநேயர் எட்டாம்வீட்டில் போகிற போது சம்புமாலியானவனை அதிக கோபத்துடனே ஆஞ்சநேயர் பார்த்து தனது வாலை கீழேவிட்டு சம்பு மாலிக்குத் தெரியாமல் காலை யுதைக்க அவன் இரண்டு விழியும் பிதுங்கி பூமியில் விழுந்து காலன்பதி யடைந் தான். அதைவிட்டுப் போகின்றபோது அக்கினிகேது என்றவன் அநேக பாணங்களினலே தும்சப்படுத்த ஆஞ்சநேயர் தனது வாலினல் அவன் கழுத்தை யிறுக் கிப்பிடித்து எமபுரஞ் சேரும்படி செய்துவிட்டு அப் பால் போகிறபோது ஆஞ்சநேயரோடு எதிர்த்து யுத் தஞ்செய்ய நிர்வாகமில்லாமல் மூலைக்குமூலையாய் விழு ந்து அலைச்சல்பட்டு மயிலிராவணனண்டையில் போய் உரைக்க மயிலிராவணன் தனக்குக்தானே யோசனை செய்து ஒ இராட்சதர்களே! மாகங்கி சொன்னபடியே ஆச்சுது பார்த்தையா, இதென்ன வதிசயம்! முன் ஆகாயவாணி நீலமேகன் இப்பாதாள லங்கையைப் பட்டங்கட்டிக் கொள்வானென்றுளே; அவளுடைய திருவாக்குக் கெதிர்வாக்கில்லாமல் முடியுமாப்போற் ருேணுகிறதென்று மனதில் நினைத்து விசாரத்துடனே தன் மனது தாளாமல் கோபம் பெருகி மனது கருகி இராக்ஷதரைப் பார்த்துச் சொல்லுகிருன்.

இராக்ஷகர்களே வாருங்கள்! உங்களா லானவரை யில் பாருங்கள்! மூலைக்குமூலை ஏனேடுகிறீர்கள். நான் இருக்கச்சே உங்களுக்கு என்ன பயம். நானே அந்த அனுமந்தனைச் சங்காரஞ் செய்வேன். என்னுடைய மாய்கையைக் கண்டுபிடிக்கக் கூடுமோ? அவன் புத்தி யில் நாடுமோ? நாடாது. ஒருசமயம் கண்டு பிடித்தாலு மென்னுடைய ஜீவனிருக்குமிடம் அவனுக்குத் தெரி

யுமோ? அவனுக்கென்னைச் சங்கரிக்கும்படியான வல்லமையுண்டோ? இல்லை நானே அந்தஅனுமாரைக்கொல்லுகிறேன். இதோ பார் என்னுடைய வீரயாகத்தைச் செய்து மகாபூதபிரளயத்தைஅழைத்துக்கொண்டுபோய் அவனை அதம்பண்ணுகிறேனென்று பராக்கிரமுங்கூறி ஆஞ்சநேயர்பேரில் இரதத்தையேவ ஆஞ்சநேயர் சகல ராக்ஷதர்களும் சுகமென்று நினைத்த காலதட்சன்-உக்கிர சேனன் - வக்கிரனுசன் - களமுகன்-இரகடசிம்மன்-சம்பு மாலி - அக்கினிகேது முதலான சேனாதிபதிகளை அதஞ் செய்து இனி எவன் சண்டைக்கு வருவானென்று யோசனைசெயது இடுப்பிலிரண்டு கையையு மூன்றிக் கொண்டு இறுமாந்து கொடூர முகத்தோடு கண்ணில் நெருப்புப் பொறிகள் பறக்க உருமிப் பார்த்திருக்கிற போது அங்ஙனமொரு ரதம் வரக்கண்டு இது யாருடைய ரதம்? இவன் எந்த சேனாதிபதியோ வென்று நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்க, அந்த இரதத்தின் பேரில் வெவ்விய புரவிகள் பூட்டியிருக்க, இருபுறத்திலும் இராக்ஷதாள் சூழ்ந்துநிற்க, வச்சிரத்தினுற் செய்த வெள்ளைக்குடையானது பிடிக்க, ரதகஜ மேளமடிக்க வீரர்கள் படபடவென்று குதிக்க, குதிரைகள் தடதடவென்று நடக்க, இருபுறத்திலுஞ் சாமரைவீச, சகல ஜனங்களும் கோஷ்டமிட்டுப் பேச, இப்படி நானுவித அலங்காரத்துடன் பாணங்கள் சொரிய மகா ஆயுத பாணியாய்வருவதைக்கண்டுஆஞ்சநேயர்சொல்லுகிறூர்.

அடாவாடா மயிலிராவணு! உன்னுடைய ராக்ஷதன் எங்கு ஒளித்தாலும் உன்னை விடுவேனே? நில்லு நில்லென்று கருவிச் சொல்லிக்கொண்டு வருகையில் மயிலிராவணன் கோபங்கொண்டு அநேக பாணங்களினுல் அடிபட்டு நொந்து உடம்பாதியந்தமும் இரத்தமயமா யொழுகும்படி பாணத்தை ஆஞ்சநேயர்பேரில் பிரயோகஞ்செய்தான். அப்போது ஆஞ்சநேயர் மகா கோபத்துடனே கொஞ்சமாகிலும் சட்டைபண்ணுமல் மனதில் யாதொன்றுமெண்ணுமல் பாணத்தின்மேல்விழுந்தோடிவர, மயிலிராவணன் அனுமந்தன் வருவதைப் பார்த்து மகா தவஞ்செய்த வரப்ரசாதமான அஸ்திரங்களை எல்லாம் ஏககாலத்திலே பிரயோகஞ்செயய அது அக்னி சுவாலையாய் எரிந்துகொண்டுவர அனுமார் அக்கினி

பாஸ்திரத்தை வாலாலே சுழற்றியடிக்க அப்போது அக்னியாஸ்திரம் பூமியிலே விழுந்து எரிந்துபோயிற்று. மயிலிராவணன் அக்னியாஸ்திரம் வியர்த்தமாய் போனது கண்டு மகாகோபத்துடனே மகாவுக்கிர யஸ்திரத்தை யெடுத்துபிரயோகம்பண்ணினன். அவ்வஸ்திரமானது விடுபட்டு அனுமாரைச் சுற்றிவந்து பூமியில் விழுந்து போக மயிலிராவணன் கண்டு சகல அஸ்திரமும் பிரயோகம் செய்து பலனென்ன? இனி யாதோரஸ்திரமுமில்லையென்று மனதில் திகிலடைந்து மகா விசாரத்துடனே யோசனைசெய்து அடா நாம் என்னகாரியம் செய்தோம். மாதங்கி சொன்ன வார்த்தை நிலைநின்றது. அவ்வார்த்தையைக் கேளாமற் போனேமே. ஆ தெய்வமே! இனிமே லெவ்வாறு செயிப்போம். சதகண்டராவணனுடனே பிரதிக்கினைசெய்து உறுதிகூறி வந்தோமென்று மனச்சஞ்சலமாய்த் தனது தேரின்பேரில் வில்வளைத்து யுத்தஞ்செய்யாமலிருக்க, அதை ஆஞ்சநேயர் பார்த்து அதிக உக்கிரத்துடனே ஆகாயத்திலெழும்பி அவனுடைய தேரின்பேரிலே குதித்து அம்சப்படுத்தும்போது அவன் தேரைவிட்டு கீழேகுதித்து அப்பால் நிற்க, ஆஞ்சநேயரால் ரதமானது பொடிப்பொடியாய்ப் போனவுடன் மயிலிராவணன் நிற்கப் பார்த்து அனுமார் ஐந்துவிரலையும் மடக்கி அவனுடைய நடுமார்பிலே குத்த மயிலிராவணன் மூர்ச்சையாகி நாக்கிலுமூக்கிலு மிரத்தங் கக்கிக்கொண்டு அலறி பூமியில் விழுந்து உடனே எழுந்திருந்து கோபத்துடனே தண்டாயுதத்தைச் சுழற்றி, ஆஞ்சநேயர்பேரி லெறிய, மூர்ச்சையடைந்து சீக்கிரத்தில் பந்தடித்தாற்போல் பதறிக்கிளம்பி அட்டகாசஞ்செய்து மயிலிராவணனைப்பார்த்து அடா நில்லு நில்லு திருடாவென்று சொல்லிக்கொண்டு தனது வாலைக் கீழேபோட்டு அவனுடைய இரண்டு காலையும் சுழற்றி இழுத்து ஆகாயமார்க்கத்திலே தூக்கி கரகரவென்று சுழற்றி பூமியிலடிக்க, மயிலிராவணன் பூமியிலறைபட்டு நூறுசுக்கலாய்த்தெறித்து உருவுதெரியாமலடித்து பிகுத்தஞ்செய்து சந்தோஷத்துடனே நாம் செய்த பிரதிக்கினை மூடிந்ததென்று ராமச்சந்திரமூர்த்தியிருக்கும் ஸ்தானமாகத் திரும்பித் தோத்திரஞ் செய்ய, அப்போது மயிலிராவணன் முன்போலுருவாகி ஐந்து

விரலே முஷ்டியாகப்பிடித்து ஆஞ்சநேயர் பின்புறத்தில் வந்து அவரது முதுகிலோங்கிக் குத்தினன. அவர் திரும்பிப் பார்த்தார. மயிலிராவணன நிற்பது கண்டு இதேது காரணம். இவனைச் சங்காரம் பண்ணினேனே? இவனா மயிலிராவணனபோல் தோன்றுகிறது. இன்ன மிவனைப்போ லிரண்டு மூன்று பேருண்டோ வென்று ஐயுற்று யோசனை செய்துகொண்டிருக்கும்போது, அவ னட்டகாசம பண்ணி அருகில் நினறுகொண்டு அநு மாரைப் பாரத்து அடா வானரம என்று சொலலி நிற் கிறவனை ஆஞ்சநேயர் சற்றுகிலும் திருமபிப் பாராமல ஐந்துவிரலால முஷ்டிகுத்தாகக் குத்தி யதனுசெயய மறு படியும் எழுந்திருந்து யுத்தஞ் செயய பினனும் மயிலி ராவணனைச் சாகவடித்து அஷ்டதிக்கிலும் மாரக்கண டங்களை சக்கை சக்கையாகப் பேர்த்தெறிய அக்கணடங் கள் மூன்னூறுயோசனைக்கப்பால் போய்விழுந்தன.

அப்போது ஆஞ்சநேயர் மயிலிராவணனைக் கொன் றுவிட்டோமென்றுசந்தோஷத்துடனே ராமமூர்த்தியை நினைத்து தோத்திரம் செய்யும்போது, மயிலிராவணன் முனனூறுயோசனைக்கப்பால விழுந்துகிடந்தமாரக்கண் டங்களெலலா மொன்றுகச்சேர்ந்து முன்போலுருவாகி அடா அநுமந்தா! நீசண்டைக்கு வருவா என்று கேட்க அநுமார் மயிலிராவணனைபபாரதது இதென்ன ஆச்சரி யம!இறந்துபோனவன அடிக்கடி பிழைத்துவருகிறன். இவ்வதிசயம நானெங்கும் கண்டதில்லை. இதென்ன ஆச்சரியமென்றுயோசனைசெய்து பலவிதமாய இதென் னகாரணமோ அல்லது தவமோ அலலது வலலமை யோ? அந்தப் பாதகனுன விபீஷணன் மயிலிராவண னுடைய வலலமை இபபடிப்பட்டதென்று சொலலாமற் போனனே. இனிமேலிவனை எப்படிகொல்கிறது? இவ னிவ்வண்ணமாய் செத்துச்செத்துப பிறபபானுனல நான் எபபடி செய்ப்பேன். என பிரதிக்கினை எப்படிமுடியும? நீலமேகனுககு என்னுல பட்டங்கட்ட முடியுமோ? ஆ! ஆ! தெய்வமே! இப்படி வல்லமையான மயிலிராவண னுடைய மாய்கைக்கு நான் பாத்திரனல்ல. ஓ இராம லட்சுமணுளே! உங்கள காரியார்த்தமாய் வந்த எனக்கு இந்த அபஜயம வரலாமோ. தேவர்கள் நீங்களாவது இங்ஙனம் வந்து இவனது வரமிபபடிப்பட்டதென்று

எனக்கு சொல்லலாகாதா? என்னசெய்வேனென்று விசாரப்பட்டுக்கொண்டு மனந்திடப்பட்டு இனிமேல் நடக்கும் மர்மம் யார் சொல்லப்போகிறூர்கள். நீலமேகன் தூரதண்டிகை இவர்களிடத்திற்குப் போய் இம்மர்மந் தெரிந்துகொள்ள வேண்டுமென்று மனதிலுத்தேசித்து மயிலிராவணனைப் பார்த்து அதிக கோபத்துடனே தன் வாலைக் கீழேவிட்டு அவனுடைய கால்முதல் கழுத்து வரையில் பிரிசுற்றினற்போலச் சுற்றி யிழுத்து ஆகாயத்தில் கரகரவென்று சுழட்டி பம்பரம்போல சுழற்றி விசையா யெறிந்துவிட்டுஅங்கிருந்தபடியே நீலமேகன தூரதண்டிகை இவர்களருகிற் போகவேண்டுமென்று மகாசந்தோஷத் துட னிருந்தார். அங்ஙனம் அப்படியிருக்க தூரதண்டி நீலமேகனைப் பார்த்துச் சொல்லுகிறுள். அடா வாடா குமாரகா! சண்டாள மயிலிராவணனுடனே ஆஞ்சநேயர் யுத்தஞ்செய்து எப்படி போத் தெரிந்தாலும் மறுபடியு மொன்றேடொன் றுருப்படுத்திக்கொண்டு மறுபடியுஞ் சண்டைபண்ண வருவானே. அவனைக் கொல்லும் விதம் ஆஞ்சநேயருக்குத் தெரியாது. நீ இங்கேயிரு நானவரைக் கண்டு ராவணனைக் கொல்லுகிறதற்குத் தந்திரஞ் சொல்லிவருகிறேனென்று நீலமேகனை அவ்விடம் விட்டுப் பிரயாணமாய் வந்து பார்க்க அப்போது மயிலிராவணனும் அனுமாரும் ஒரு வீட்டிலிருந்து சண்டைபண்ணுகிறதைக் கண்டு ஆஞ்சநேயரிடத்தில் போய் யாதொரு சங்கதியுஞ் சொல்லமுடியாமல் பயந்து அந்தவீட்டில் நின்றுகொண்டிருந்தாள்.

அப்போது ஆஞ்சநேயர் தூரதண்டிகையைப் பார்த்து சந்தோஷமடைந்து அவளருகிற் சென்று என்ன சங்கதி யென்றுவினவ, தூரதண்டிகை சைகையால் ஆஞ்சநேயரைப் பார்த்து சுவாமி அனுமாரே! உட்காருமையாவென்று சொல்லி நாங்கள் ஒளித்திருந்த விடத்திலே நீலமேகனை விட்டுப்போட்டு உமதண்டைக்கு வரவேண்டுமென்று வந்தேனென்று சொல்ல, அப்போது ஆஞ்சநேயர் தூரதண்டிகையைப் பார்த்து வாரும் பெண்ணே தூரதண்டி! என்னசொல்லுகிருய்? அந்த மயிலிராவணனுடனே பலபல யுத்தம் பண்ணி சித்திரவதை பணணினலும் மறுபடியு மெழுந்து சண்டைக்கு வருகிருன். இவ்வண்ணம் செத்துப்பிழைப்பது இவ்

வுலகிலுண்டோ? இதென்ன ஆச்சரியம்! அவனுடைய விருத்தாந்தமென்ன? ஆண்மைதானென்ன? நீயாகிலு மறிவாயா? அறிந்தாயானால் தெரிந்தவரையிற் சொல லென்று கேட்க, தூரதண்டிகை ஆஞ்சநேயரைப்பார்த் துச் சொல்லுகிறாள்: வாரும் வானரசிரோன்மணியே! நான் தெரிந்தவரையிற் சொல்லுகிறேன் கேளும், முற் காலத்தில் நானுமென்கணவனுஞ் சுகமாக வாழ்ந்திருக் குங்காலத்தில் ஒரு காரியார்த்தமாய் என் வீட்டில விருந் துண்ணவந்தான். அவனுக்கும் சகல பிரஜைகளுக்கும் சட்சுவையோடு அன்னம்பாலிக்கச் சகலரும் போஜனஞ் செய்து கைகால் சுத்திபண்ணி தாம்பூலந் தரித்துக் கொண்டு சந்தோஷமாயிருக்குங்காலத்தில் மயிலிராவண னவன் தனதுயிர் நிலைத்திருக்கப்பட்ட ஸ்தானத்தைக் கபடில்லாமற் சொன்னான்.

அந்த விபரத்தை யாதென்று கேட்பீரானால் யான் சொல்லுகிறேன் கேளும். மயிலிராவணனென்பவன்றால் அநேக தவங்கள் செய்து சகல வரங்களும் பெற்றது மன்றி மறுபடியும் பிர்மாவை அநேககாலந் தபசுபண் ணினான். அந்தத் தவமானது சத்தியலோகத்தைத் தணலாயெரிக்க அப்போது பிர்மா சரஸ்வதி சமேதராய் மயிலிராவணன் அருகில் வந்து தபசை நிறுத்து உனக்கு வேண்டும்வரத்தைக்கேளென்ன, மயிலிராவணன் பிர்மா வைப் பார்த்துச் சொல்லுகிறான்: வாரும் பிர்மாவே! நீ வரங்கொடுப்பது மெய்யானால் சொல்லுகிறேன் கேளும் நீரெனக்குச் சகல அஸ்திரங்களுங் கொடுத்திருக்கின் றீர். இனி யெனக்கு யாதொன்றும் தேவையில்லை. நீர் கொடுத்த அஸ்திரத்தினாலே நான் யுத்தஞ்செய்து ஜெயத்தை யடைவேன். அந்த அஸ்திரம் வியாதத மானால் வெட்டிப்பிளந்தாலு மென்னுயி ரென்னைவிட்டு நீங்காமலும் வெட்டுப்பட்டு துணிக்கையானாலும் மறு படியு மொன்றோடொன்று சரீரம் சேர்ந்து உயிராக வேண்டும எப்போதுஞ் சண்டைக் கிளையாமல் வெற்றி பெற வேண்டும். அவ்வண்ணம் வரங்கொடுத்தால் மகா உத்தமம். அப்படி கொடுப்பீரானால் உம்முடைய கீர்த்தி யானது உலகெங்கும் பிரகாசிக்குமென்று பிரதிபாலித் துச் சொல்ல, பிரமாவானவர் பார்த்துச் சொல்லுகிறார். பிள்ளாய் இலங்கைமன்னவா! நீர்கலங்காது சொன்னால்

இவ்வார்த்தை கேட்டால் உயிர் போய்விட்டால் பஞ்ச பிராணனும் போய்விடுமே. மறுபடியு மெவ்வாறு உன் பிராணன்வரும். பஞ்சபிராணனிருநதாலல்லவோ ஜீவன் வருமென அப்போது மயிலிராவணன் சொல்லுகிருன். வாரும் வரங்கொடுக்கும் பிரமாவே! பஞ்சபூத மிருந்தா லொழிய ஜீவன் வராதென்றீர். யான் சொல்லுகிறேன் கேளும் என்னுடைய பஞ்சபூதம் ஐந்துவண்டா யுருவு கொண்டு என் பாதாளவிலங்கையிலே மூவாயிரம் யோச னேக்கப்பால் விந்தியாசல பர்வத மொன்றிருக்கிறது. அப்பர்வதத்தில் ஐந்து குகை யிருக்கின்றது. அந்த ஐந்து குகையிலு மென்னுடைய பஞ்சபூதங்கள் ஐந்து வண்டா யுருவுகொண்டிருக்கவேண்டும. இவ்வண்ண மாய் வரங்கொடுத்தால் உலகெல்லாம் அதம்பண்ணு வான். யாவரையுந் தன் மனதிலே பாததூளியென் றெண்ணுவானென்று மனதில் உத்தேசித்து மயிலி ராவணனேப் பார்த்துச் சொலலுகிருர்.

வாரும் பிளளாய மயிலிராவணு! உன்னிஷ்டப்படி வரங்கொடுத்தேன். யாராகிலும் உன்னோடெதிர்த்து யுத்தஞ்செய்து உன்னே மிதித்துக்கொண்டு அந்த விந்தி யாசல பருவதத்திலிருக்கிற வண்டையும் நசுக்கிப்பொசுக் கிக் கொனறுவிட்டால் அப்போது உன் ஜீவன் போய் விடுமெனறு கூற மயிலிராவணன பிர்மாவைப்பார்த்துச் சொல்லுகிருன். வாரும்பிர்மசிருஷ்டியே! அவ்வண்ண மெடுததது மிதித்துக்கொண்டு அந்தவிந்தியாசலபர்வதத் திலிருக்கிற வணடுகளே ந்தையுங கொன்ருல் அப்போது என்சீவன் போகும். அதிலொருவண்டு தப்பிப்போனுல் சாகத்தக்கதில்லேயென்று வரங்கொடுமென்று சொலல, பிர்மாவானவர் அவன்கோரிக்கைவாறே வரங்கொடுத்து சத்தியலோகத்துக்குப் போனுனென்று என்னுடன் என கணவனுகிய காலததனிடத்தும் சந்தோஷத்துடன் சொல்லியிருந்தான். ஆகையால் ஆஞ்சநேயரே! அவ னுக்கு இததனே கெர்வமு மாங்காரஙகளு முண்டாயின. அவனுடைய விருத்தாந்த மிப்படிப்பட்டது. அவனே எவ்விதமாகிலும் சங்காரம்பண்ணும் பிள்ளாயென்று சொல்ல ஆஞ்சநேயர் ஆ! ஆ! இவ்வளவு தந்திர மிருக் கிறதா வெனறு மனதில யோசனே செய்துகொண்டு உடனே அதிவேகமாய் அவ்விடத்திலிருந்து ரணக்

களம் வந்து குதித்தார். அப்போது மயிலிராவணன் ஆஞ்சநேயரைப் பார்த்து அடா வானரா! நீ எங்கே போனாய்? நான் உன்னை விடுவேனோ? எமபுரத்துக்கனுப்புவேன்: நீ கெட்டியாய் நம்பு. இதுபர்யந்தம் எங்கொளித்திருந்தாய்? என்னுயிரைப் போக்க உன்னாலாகுமோ? இதோ பார் உன்னிடம் நானொரு மாய்கை பண்ணுகிறேன். உன் கண்ணுக்குப் புலப்படாமலிருக்கிறேன்; என்னுடைய மாய்கையைப் பாரும் வல்லவனென்று மனதில் சந்தேகந்தீரும். என்றுண்மைகூறி அக்கணமே கண்கட்டு மந்திரஞ்செய்து ஆஞ்சநேயர் கண்ணைக்கட்டி அவரது கண்ணுக்குத் தெரியாமல் நின்று அநேக விசேஷங்களைச் சொல்ல, ஆஞ்சநேயர் மயிலிராவணனைப் பார்த்து அடா திருடா வாடா இராக்ஷதப்பதரே! நீ இப்படிப்பட்ட மாய்கை அடைந்திருக்கிறாய்; இந்திரசித்தனென்பவன் எவ்வாறு போனான்? அவ்வாறு நானுன்னை யதம்பண்ணுகிறேன்; உன்மாய்கையைவிட்டு என் முன்னே நில்லடா? என் கேள்விக்கு உத்தரவு சொல்லடாவென்றார். ஆஞ்சநேயர் பின்னும் மயிலிராவணனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

வாடா இராட்சத அதமா! இவ்வுலகு உனக்குச் சதமா?உன்விருத்தாந்தம் யாவுமறிந்தேன். உன்மாய்கையுந் தெரிந்தேன். உன்னையும் என் வாலுக்கு பலிகொடுக்கிறேன். மாய்கைசெய்தாயே, என்னை நீவைதாயே என் முன் நில்லடா என்னை சண்டையில் வெல்லடா ஏன் கெட்டுப்போகிறாய்; அந்தப் பாவியான சதகண்டராவணன் சீதாதேவியைத் திருடிக்கொண்டு வந்தான். அந்தத் திருடனை ராமமூர்த்தி கோதண்டத்தினாலே அதம் பண்ணிப் போடுகிறார். நாளையதினம் சூரிய உதயத்திற்கு நீயும் திருடனோடு திருடனாய் கட்டுண்டு ராமலட்சுமணனைக் கொண்டுவந்து திருட்டுத்தனமாய் வைத்த உன்னை லேசாக விடுகிறதில்லை. நீ என்ன செய்வாய; அஷ்டமத்துச் சனியன் புட்டத்து துணியை யுரியுமென்பதுபோலாயின.

அதற்காக என் செய்வாய்? ஆகாயவாணி வாக்குத் தப்புமோ, உன் செய்கை யாவருக்கு மொப்புமோ, சூரிய உதயத்துக்குள் உன் பாதாள விலங்கையை நீலமேகனுக்குப் பட்டங் கட்டுகிறேன். உன் சீவனை இக்ஷணமே

எமபுரத்துக் கனுப்புகிறேனென்று பிரதிக்கினை கூறி மயிலிராவணனைப் பிடிக்க பிரதக்ஷணமாய் சுற்றி லகு பார்த் திருக்கிறபோது மயிலிராவணன் திடுக்கிட்டு இதேது ஆச்சரியம் உன் விருத்தாந்தம் உன் மாய்கை இவற்றை யானறிவே னென்ருனே; இவ்வண்ண மிவ னறிந்துசொன்னது தூரதண்டிகையா லறிந்திருக்க வேண்டும், இல்லாவிட்டால் இவனறியத் திறமையுள் ளவனே வென்று யோசனைசெய்து மயிலிராவணன் பயந்து இனிமேல் நாமிவன் கையிலகப்படப்போகாது அகப்பட்டாலிவன் நம்முயிரை மடித்திடுவானென்று எவ்விதத்திலுந் தப்பித்துக்கொண்டே யிருந்தான். அச் சமயத்தில் ஆஞ்சநேயர் மயிலிராவணனைக் கட்டிப்பிடி த்து பூமியிலறைந்து கொல்லுவோமென்று யோசனை பண்ணி ஸ்ரீராமமூர்த்தியை நினைத்து அதிக கோபத் துடனே இனிமேல் தாமதஞ் செய்யக்கூடாது. தாமதஞ் செய்தாலிப்பாதகன் ஓடிப்போவானே. இப்போது இரு பத்துநான்கு நாழிகையாச்சுதென்றறிந்து உடனே அங் கிருந்தபடியே ஆகாயத்தின்மேல் எழும்பி மயிலிராவண னுடைய தேரின்மீது குதித்தார். அவன் திடுக்கிட்டு பயந்து நடுநடுங்கி இனிமேலிங்கே நிற்கக்கூடாதென்று அந்தரத்தியானமாய் ஒருவர் கண்ணுக்குந் தெரியாமல் மாய்கையாய் மறைந்தோடிப் போனான். அப்போது அனுமார் தேரிலிருந்து கீழேகுதித்துப் பார்த்து மயிலி ராவணனைக் காணமல் அவனெங்கு ஓடிப்போனனோ? என்னமாய்கை செய்தானோ? தெரியவில்லையென்று நான் குமூலையுஞ் சுற்றிப்பார்த்து எங்குங் காணமல் விசாரப் பட்டுக்கொண்டிருக்கும்போது மயிலிராவணன் அதிசீக் கிரமாய் அனுமார் வந்துவிடுவாரோ; வந்தால் பிடித்துக் கொள்வாரோ வென்று மனதில் திகிலடைந்து திரும் பிப்பார்த்துக்கொண்டு ஓடிப்போய் தங்கக்கோட்டைக்கும் மூத்துக்கோட்டைக்கும் நடுவில் ஒரு வுத்தியானவனத் தோப்பில் ஆலவிருட்சம் பிரமாண்டமாய் வளர்ந்து கப் புங் கிளையுமாகத் தழைத்திருக்கின்றது. அந்தமரத்தின் கீழ் ஒருவழி போகிறது. அந்த பாதாளத்திலொரு வெளி யிருக்கின்றது. அந்த வெளியிலேபோய்ப் பதுங்கியிருந் தான். அப்போது ராட்சதப்பிராமணன் யாவரும் மயிலி ராவணன் ஓடிப்போவதைப்பார்த்து ஆலமரத்தின்கீழே

வீரணயாகம் பண்ணப்போனவன்போல காண்கின்றது. ஆகையால் நாமும் போகவேணுமென்று அதிசீக்கிரமாய் சுயரூபமெடுத்து ஒருவர்கண்ணுக்கும் புலப்படாமல் யாகத்துக்கு வேண்டுவனகொண்டு யாகசாலையை முஸ்தீபு செய்து ஒன்பது கோணமாய் ஓமகுண்டம் வெட்டி மயிலிராவணன் உட்கார்ந்திருந்து ஆர்த்திபண்ணுகிறதற்கு முக்கோணமாய் மேடைபோட்டு சுடலைக்குப்போய் நெருப்பெடுத்துவந்து தலைமண்டையோட்டில எருமைக்காலில் இரத்தஞ் சொரிந்து ஓமகுண்டத்தைச் சுற்றிலும் அந்தத் தலையோட்டையிட்டு எருமைக்கிடாவின் எலும்புகளினுலே ஓமகுண்டத்துக்கு நான்கு பக்கத்திலும் தர்ப்பாசனம் போட்டாற்போல அஸ்திகளைப் பரப்பி பனைமரங் கொண்டுவந்து துஜஸ்தம்பமாக நாட்டி அந்த துஜஸ்தம்பத்தில் ஒரு சர்ப்பத்தைக் கட்டினார்கள். பின்னும் ஓமகுண்டத்தினடுவில் உயர்வாய் தலைகீழாகக்கட்டி அக்கினிச் சுவாலையாக வெழும்ப அத்திரிகோணமேடையில் தலைமண்டையோடுகவிழ்க்து அவ்வோட்டின்பேரில் தனது வலதுகாலையூன்றி இடதுகாலை கழுத்தில் மாட்டி அர்த்தசந்தன மணிந்துகொண்டு உதிர நிறமான புட்பமாலைகளை கழுத்திலும் சிரசிலும் தரித்துக்கொண்டு ரத்தவஸ்திரமுடுத்தி இடக்கரத்தில் சபமாலையேந்தி வலக்கரத்தினால் எக்கியாஸ்தி முதலான நவதானிய சமித்துகளை ஆவாகனம் பண்ணி அந்த துஜஸ்தம்பத்திலே கட்டியிருக்கப்பட்ட சர்ப்பத்தையறுத்து நெய்யிற்றோய்த்து பூரணாகுதிகொடுத்தான். கொடுத்தவுடனே அந்த அக்கினிகுண்டத்திலிருந்து பிரமாண்டமாய் ஒருபூதம் புறப்பட்டு மயிலிராவணனைப் பார்த்துச் சொல்லுகின்றது.

வாருமையா பாதாளலங்கைக் கரசனாகிய மயிலிராவணா! என்னை யாதுகாரியமாய் இந்த யாகஞ் செய்து அழைப்பித்தீர்? அந்தக் காரியத்தைச் சொல்லும். நான் செயித்து வருகிறேனென்றுகூற, அப்பூதத்தைப் பார்த்து, ஓ பூதமே! என் சத்துருவாகிய ஆஞ்சநேயரைச் சம்மாரஞ் செய்து வருவாயென, அப்பூதம் பிரளயகால ருத்திரனைப்போல் கர்ச்சித்து மயிலிராவணனைப்பார்த்து மகா வல்லமையுள்ள பாதாளயிலங்கைக் கரசனே! நீ கூறியவாறே ஆஞ்சநேயரை அதம்பண்ணிவருகிறேன்.

அவனெப்படிப்பட்டவனே? அடங்கா மன்னனே? யாரோ தெரியாது. சகலத்திற்கும் நீரே துணை. இந்த வேள்வியை விடாமல் செய்துகொண்டுவா; நான் சீக்கிரமாகப்போய் செயித்து வருகிறேன்; நீ யாதொன்றுக்கு மஞ்சவேண்டாமென்று கூறி, பின்பு அந்த யாகசாலையைவிட்டு இரணபூமியில் ஆஞ்சநேயரிருக்குஞ் சமீபத்தில் வருவதை அனுமார்பார்த்து இதென்னடாவென்று அதிக கோபத்துடனே எழுந்திருந்து அந்தப் பிரளயகால பூதத்தைப் பார்த்துச் சொல்லுகிறார்.

வாடா ராக்ஷசமாயா! நீ என்ன மாய்கையாய் வந்தாலும் நான் பயப்படுவேனே? என்று அதிக கோபத்துடன் ஐந்துவிரலையும் முஷ்டியாகப் பிடித்து பூதத்தைக் குத்தவரும்போது அந்தப் பிரளயகாலாக்கினி பூதமானது ஆவென்று வாயைத் திறந்து கோவென்று அட்டகாசஞ்செய்து வாயிலிருந்து அக்கினிச் சுவாலையானது குபீல் குபீலென்று புறப்பட நடந்து ஆஞ்சநேயரென்பவர் நீதானே? உன்னை இப்போதே பஸ்மீகரமாக எரித்துப் போடுகிறேனென்று ஆஞ்சநேயருக்கெதிரில்நின்று ஆவென்று வாயைத்திறந்தது. உடனே அவர்பேரில் அக்கினிச் சுவாலை சூழ்ந்து பற்றிக்கொண்டெரிய, அவரக்கினிக்குப் பயந்து நடுங்கி ஒடுங்கி மூர்ச்சையடைந்து சோபந்தெளிந்து ஆ! இதென்ன காரணமென்று ஆச்சரியப்பட்டு கோபத்துடனே அப்பூதத்தின் மார்பிலே ஒரு குத்துவிட்டார். அக்குத்தினல் பிரளயகால பூதமானது மார்பு பிளந்து மூர்ச்சையாய் பூமியில் விழுந்தெழுந்து கோபமீறி ஆஞ்சநேயரைப் பார்த்து சமீபத்தில் வந்து நாலுவிசை மூன்றுவிசை விடாமல் அக்கினிச் சுவாலை சொலிக்கும்படி யூத, அப்போது அவருக்கு திரேகமெல்லாம் அனலாயெரிக்க எரிந்தவிடமெல்லாந் தொடைக்க எரிச்சல் மாருமல் வேதனையாகவிருந்தது. அப்போது அனுமார் வருத்தமடைந்து சீதாதேவியையும் இராமலட்சுமணனையுமநினைத்து பலவாருய்த் தொழுது கண்ணீர் விட்டழுததுயன்றி அக்கினிபகவானை நினைத்து உன்னிமித்தியமல்லவா இராவணசம்மாரம் பண்ணுகிறேன்; சகல தேவதைகளும் நீர் உபகாரார்த்தமாய் வந்தவரல்லவா; அப்படியிருக்க நீரென்னைத் தகிக்கலாமா! நீ இப்படிச் செய்

வது உனக்குத் தருமமா வென்று தோத்திரஞ்செய்தார். அப்போது அக்கினிபகவான் சில்லென்று தணிந்திருந்தார். அப்போது ஆஞ்சநேயர் நேரில்வந்து உட்கார்ந்திருக்க அவர் ஸ்தூலசரீரத்துடனே அவ்விடம்விட்டு அப்பாலே நீங்கிப்போய் அடங்கி கிளம்பி தூரதண்டிகையருகில்வந்து குதித்து அவளைப் பார்த்து ஆஞ்சநேயர் சொல்லுகிறார். வாரும் பெண்ணே தூரதண்டிகையே! நானுன்னோடு பேசிக்கொண்டிருந்து இவ்விடம் விட்டுப் போனேனே; அத்தருணத்தில் மயிலிராவணனெங்கேயோ மாய்கையாய்ப் போய்விட்டான். அதன்பின் எங்கிருந்து வந்ததோ இப்பிரளயகாலபூதம்? இது அனலாயெரிக்கின்றதே; என்னாற் கூடுமானவரையில் யுத்தஞ்செய்தேன்; யாதொரு காரியமு முடியவில்லையே; இப்பூதமெக்காரணத்தால வந்ததோ; அல்லது இராவணனுடைய மாய்கையால் வந்ததோ; யாதுந் தெரியேனேயென்று தூரதண்டியைக் கேட்க; அப்பெண்ணனவள் யானென்று மறியேனென்று சொல்ல ஆஞ்சநேயர் சொல்லுகிறார். ஸ்ரீதர்மதேவதைகளே! யான் சொல்லுகிறதைக் கேளுங்கள். வைகுந்தவாசராகிய மகாவிஷ்ணு ராமமூர்த்தியா யவதாரஞ்செய்து சத்தியந் தவருதிருக்கிறதும், சீதாபிராட்டியும் மகாபதிவிரதையாயும், நானந்த இராமலட்சுமணனுடைய பாதாரவிந்தங்களைச் சேவித்துக்கொண்டிருப்பது மெய்யானால் இப்போ தணலாயெரிக்கிற பூதமின்னதென்று எனக்குச் சொல்ல வேண்டுமென்று சொன்னார். அப்போது தர்மதேவதைகள் நடுநடுங்கி ஆகாயத்திலிருந்து ஆஞ்சநேயரைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். வாரும் அனுமந்தசிகாமணியே! இப்போது இந்தப்பூதம் மயிலிராவணனனுப்பிய பூதம், ஆனபடியால் இப்பூதத்தை செயிக்கமுடியாது. உனக்கேற்ற மர்மம் சொல்லுகிறேன் கேள். அதோ தங்கக்கோட்டைக்கும் வெள்ளிக்கோட்டைக்கும் நடுவில் தோப்பிருக்கிறது. அத்தோப்பில் ஒரு வழி போகின்றது. அதில் ஐந்து குகைகள் இருக்கின்றது. அவ்விடத்திற்குப் போனால் ஒரு யாகசாலை அமைத்துயிருக்கின்றது. அந்த யாகசாலையில் இந்த மயிலிராவணனனவன் வீரணயாகமென்கிற ஒருயாகத்தை அதர்வணவேததோத்திரமாய்ச்செய்கிறான். அந்த யாகம் பண்

ணச்சே ஓமகுண்டத்திலிருந்து இந்தப்பூதம் புறப்பட்டு வந்தது. அவனின்னமும் யாகஞ் செய்துக்கொண்டே யிருக்கிறான். அவன் யாகத்தை முடிக்குமுன் நீ அதி சீக்கிரத்திற்போய் விக்கினஞ் செய்தால் இப்பூதத்துக் குப் பலம் ஒடுங்கிப் போகும். அப்பால் பூதம சொல் லாமலோடி யமபுரத்தைநாடும். அவ்விடத்தில் தானே சங்காரம் பண்ணலாமென்று தருமதேவதைகள் கூறி னார்கள். அதைக் கேட்டவுடன் ஆஞ்சநேயர் ஆகா யத்தில் எழும்பி அந்த இடத்தைதேடிப்போகும்போது அப்பூதமானது மகாகோபத்துடனே ஆஞ்சநேயரைப் பார்த்து, அடா குரங்கே! நீ எங்கே போகிறாய்? நில்லு நில்லென்று சொல்லிக்கொண்டு பின்தொடர்ந்து துரத் திக்கொண்டுபோக ஆஞ்சநேயர் பூதத்தைப் பார்த்து நீ கெட்டாய் கெட்டாயென்று அதிக வேகமாய் ஆலமரத் தடியில் வந்திறங்கினார். அவ்விருக்ஷத்தின்கீழ் மயிலி ராவணன் மனிதரூபமாகவும் இராக்ஷதபிராமணாள் காவ லாகவும் நான்கு மூலையும் பார்த்துக்கொண்டு யாகஞ் செய்து இருந்தவர்கள் ஆஞ்சநேயரைக் கண்டவுடனே எட்டி புகுந்து கிட்டி வாசற்கதவைத் தாட்கொண்டு பூட் டிக்கொண்டார்கள். மாய்கையால் ஆலமரத்தின் பட் டையானது கீழேவிழுந்து வழிதெரியமாட்டாமல் மூடிக் கொண்டது. ஆஞ்சநேயர் அம்மரத்தின் சத்தத்தைக் கேட்டு, சீக்கிரத்தில்ஒருவன்இவ்வழியைமூடிக்கொண்டு உள்ளே ஒளித்துக்கொண்டான். இது தர்மதேவதை கள் கூறிய ஆலமரமாகையால் இம்மரத்தை அடியோ டே பிடுங்கிப்போடுவோமென்று இரண்டு கையினாலும் அம்மரத்தைப்பிடித்து அசைத்துப் பிடுங்க அப்போ தித்த மகா பிரளயகால பூதமொன்று மரத்தைப் பிடுங்கிக் கொண்டு இருக்கிற ஆஞ்சநேயருடைய முதுகிலே குத்த அவர் திரும்பிப்பார்த்து அப்பிரளயகால பூதத்தை வாலி னாலே சுற்றியிழுத்துக் கட்டிக்கொண்டு மரத்தை வேரோ டேபிடுங்கி அப்பாலெறிய, அங்ஙனம் குகைதோன்றிப் பாதாளம்போக, அந்தப் பாதாளவழியாக ஆஞ்சநேயர் பூதத்தை வாலினாற் கட்டினபடி கீழேயிறங்கி யாகசாலை யைப் பார்த்து அவ்விடத்தில் மயிலிராவணன் ஓமம் பண்ணிக்கொண்டிருக்கிறதைக் கண்டு, ஐந்து விரலையு மடக்கிக் குத்தினார். அதனால் மயிலிராவணன் மூர்ச்சை

யாய்க் கீழே விழுந்தான். அதன் பின்பு ஆஞ்சநேயர் அங்கிருந்த ஓமபாத்திரங்களையெல்லாம் உடைத்து யாக குண்டத்தை யிடித்து விக்கினஞ்செய்ய, மயிலிராவணன் மூர்ச்சை தெளிந்தெழுந்து அனுமானிடத்து கிடுகிடு வென்று நடுங்கி நாம் தப்பித்துப்போகவேண்டுமென்று மாய்கையா யோடிப்போனான். அப்போது ஆஞ்சநேயர் யாகசாலை யாவையும் அதஞ்செய்து தன் வாலில் கட்டுண்ட பூதத்தைக் கரகரவென்று சுழற்றி பூமியலடித் தார். அபபோது அந்தப் பூதமானது அந்தரத்தியா னமாய்க் குதித்து ஆகாயததிலே போய் அனுமாரைப் பார்த்துச் சொல்லுகிறது. வாருமையா அனுமந்தரே! ஸ்ரீராமகாரிய துரந்தரா! கேளும். அந்தமகாபாவியான மயிலிராவணனாலே உம்மிடத்தில்சண்டைதொடுத்தேன். போய்வருகிறேன் சுவாமி! அதோ மயிலிராவணன் மாய் கையாய் ஓடிப்போய்விட்டான். அவனைத் தேடிப் பிடி த்து சம்மாரஞ் செய்யும். அந்த யாகத்தை விக்கினஞ் செய்தீரே. உம்மைபபோல வல்லமையானவன் இவ் வுலகத்திலுண்டோ? சாமி ராமமூர்த்தி தூதா! நீ இந்த மயிலிராவணனைச் செயித்து கீர்த்தியடையக் கடவா யென்று வரங்கொடுத்துப் போய்விட்டது. அப்போது ஆஞ்சநேயர் அந்த விஷயத்தைக் கேட்டு மயிலிராவ ணன எஙகுபோனானோவென்று பராக்கிரமங்கூறி ஆகா யவாணி பூமிதேவி இவ்விருவர் சாட்சியாகத் திரும்பிப் பார்த்தார். மயிலிராவணன் காணமலிருக்க, அதிககோபங் கொண்டு, அடா திருடா! நீ எங்கே போனாய்? நான் உன்னை விடுவேனோ வென்று அருணோதயத்துக்கு முன்னே அரக்கனாகிய மயிலிராவணனைக் கொல்லாமற் போனால் இப்பாதாளயிலங்கையிலே நான் அக்கினிபிர வேசமாகக் கடவேனென்று சபதங்கூறி அங்கிருந்தபடி ஆஞ்சநேயர் வெளியே புறப்பட்டு பாதாள யிலங்கைப் பட்டணம் நாலூறு தெருவாச்சுதே; எந்தமூலையி லொளித்திருக்கிறானோ வென்று எங்குந் தேடிக்கொண் டிருக்க, அததருணத்தில் மயிலிராவணன் ஆஞ்சநேயர் கண்ணுக்குப் புலப்படாமல் அவர் சொன்ன விசேஷங் களையெல்லாம் கேட்டு பயப்பட்டு நடுநடுங்கி நாமெங்கே போய்ப் பிழைப்போம். அவன் நம்மை விடுகிறதாகத் தோன்றவில்லையென்று யோசனைசெய்து மூத்துக்கோட்

லங்க்கு வடபுரத்தில் ஒரு வெளியான விடத்தைப் பார்த்து, அவ்விடத்திலே போய் தன்னுடைய மாய்கையினாலே தனது சரீரத்தை வெள்ளிமலையாக்கி அவ்வெள்ளிமலையிலே சில விருட்சசாதிகளும் மண்டபங்களும் மாடமாளிகை கூட்கோபுரங்களுமாகக் கொடிமுடியோடே வெள்ளியங்கிரிக்குச்சமானமாய் விழுந்துகிடந்தான.

அப்போது அனுமாரானவர் மயங்கித் தியங்கி இலங்கைபட்டணத்து நானூறுதெருவிலுந்தேடி மயிலிராவணனைக் காணமல் தூரதண்டியருகில்வந்து வாராய் பெண்ணே தூரதண்டி! அப்பூதத்தையும் மயிலிராவணனுடைய எக்யத்தையும் விக்கினஞ்செய்து அவனைத் தேடிப்பார்க்கையில் எங்கையோ மறைந்து போய்விட்டான். அவன் எங்குற்ருனே? அவனிருக்கும் இடம் உனக்குத் தெரிந்திருக்குமாவென்று தாரகண்டிகையைக் கேட்க, அவள் அனு ரைப்பார்த்துச்சொல்லுகிருள். வாரும் சுவாமி ஆஞ்சநேயசிகாமணியே! அந்த மயிலிராவணனுடைய மாய்கையை எம்மாலறியக்கூடுமோ? யாராலுமறியக்கூடாதே. அப்படியிருக்க, அவன் மாய்கையை என்னலறிய வல்லமையுண்டோ? அவனெவ்வாருயினுனே என்ன ரூபமெடுத்திருக்கிருனே? ஆனல் சொல்லுகிறேன் கேளும். ஐயாவே! அவனெங்கேயாகிலும் மாயாசொரூபமாகி பிரமிக்கும்படியான யுற் த்தியாகி புதிதாய்த் தோன்றச்செய்வான். அதைப் பார்க்க வரும் ஆனந்தரூபமாயிருப்பானென்று சொல்ல, அனுமார் கேட்டு தூரதண்டியைப் பார்த்துச் சொல்லுகிருர். கேளும் தூரதண்டி! புதியதும் பழையதும் உனக்குத் தெரியு ல்லவா. நான் முன்னே போகிறேன். நீ என் பின்னல்வா எனக்குத்தெரியும் தெரியாமைக்கு நீ தூண்டுகோலாக யிருவென்று ஆக்யாபிக்க, தூரதணடி நல்லதென்று சம்மதித்து இருவரும் புறப்பட்டு இலங்கைப் பட்டணம் நானூறுதெருவீதியுந்தேடி கோட்டைகள் சுற்றிலும்ஓடி ஓரிடத்திலுங்காணமல் மனதுநாடி மூத்துக்கோட்டை சமீபமாக ஓடிவரச்சே அங்ஙனம் வெள்ளியங்கிரியைக்கண்டுஆஞ்சநேயர் இதுமுன்னிருந்ததோ இல்லையோவென்று சநதேகப்பட்டு அப்பால்நடக்கின்ற போது தூரதண்டியானவள் வெள்ளியங்கிரியைப் பார்த்து இதோ புதிதாயிருக்கின்றது மயிலிராவணனுடைய

மாய்கையோவென்று ஐயுற்று ஆஞ்சநேயரண்டையில் ஓடி அவருக்கு சூட்சமாய் வெள்ளிமலையைக் காட்டி இது புதிதாயிருக்கிறதென்று சொல்லவே அவள் வாக்கைக்கொண்டு ஆஞ்சநேயர் ஐந்துவிரலையு மடக்கி மகா கோபக்துடனே அந்த வெள்ளியங்கிரியை நோக்கித் தாங்கிக் குத்த அக்குத்தானது மலையிற்பட்டு சுக்கல் சுக்கலாய் நெறித்து படுசூரணமாய்ப்போக அந்த மயிலிராவணனானவன் வெள்ளியங்கிரியி லிருந்து கிணறு வெட்ட பூதம் புறப்பட்டதுபோல வெளியிற் புறப்பட்டு அனுமாரைப் பார்த்து புன்னகைகொண்டு சொல்லுகிறான். அடாவாடா அனுமந்ததூதா! அமரர்கணேயா! என்னுடைய மாய்கையை உன்னாற் கண்டு பிடிக்கக் கூடுமோ? நானுன்கையி லகப்படுவேனோ? என்னுடைய மாய்கையைப்பார் என்று அவர்கண்ணுக்குப் புலப்படாமல் அந்தரத்தியானமாய் ஓடிப்போனான். ஆஞ்சநேயர் மயிலிராவணன் மாய்கையைப் பார்த்து, அடா இவன் திருடன். இவனைக் கண்டவுடனே பிடியாமற்போனேனே. இன்னம் என்ன மாய்கை செய்வானோ? எவ்விதம் கண்டுபிடிப்பேன் என்றங்கலாபித்து மறுபடியும் லங்கைபட்டணம் வந்து நானூறு தெருக்களிலுந் தேடி எங்குங் காணமல் நடுத்தெருவில் நடந்து தேடிக் கொண்டு போகிறபோது, மயிலிராவணனானவன் தன்னுடைய உத்யான வனத்திற்குப் போய் உட்கார்ந்து கொண்டு மகாவிசாரத்துடனே இனிமேல என்னசெய்யப்போகின்றோமென்று மகா துக்காக்கிரந்தனாய் வெளியேபுறப்பட்டு நாம் அனுமாருடன் சண்டை செய்யலாமென்றால் நம்மால் முடியாது. அல்லது மாய்கையாயிருப்போமென்றால் நம்முடைய மாய்கைக்கு உடன்படுகிறவனல்ல. நாமிங்கிருந்தா லெவ்விதத்திலும் நம்மைக் கண்டுபிடித்து நம்முயிரை மடித்துப்போடுவான். ஆகையால் நாமிப்போதே சதகண்டராவண னிடத்திற்குப் போய் இவ்விடத்தில் நடந்த சமாச்சாரமெல்லாம் ஆதியோடந்தமாகத் தெரியப்படுத்தி அவனை யழைத்துக் கொண்டுவந்து சண்டைக்கேகினால் நலமாகும். இல்லாவிட்டால் நாமிப்போது ஒளித்திருப்போமானால் எவ்விதத்திலும் கண்டுபிடித்து எமபதி சேரும்படி முடிப்பதற்குச் சந்தேகமில்லை. பொழுதுவிடியுந்தருணமாயிற்று;

அனுமார் அக்கினி பிரவேசம் பண்ணுவான். பின் எப்போதும்போல லங்கைப் பட்டணத்திலே சதகண்டராவணன் சுகமாயிருப்பான். நாம் சுகமாய் பாதாளலங்கையை பரிபாலனஞ் செய்துகொண்டிருப்போமென்று யோசனைசெய்து திடீரென்று புறப்பட்டு சதகண்டராவணனை யழைத்துவருவோமென்று அதிசீக்கிரமாய் மாயாசொருபமெடுத்து ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் ஓர் தாமரைக்குளத்தில் நூல்வழியைப் பார்த்து தாள்போட்டாற்போல் அதிசீக்கிரமா யடைந்துகிடக்க, அப்போது மயிலிராவணன் தாமரை நூல் தண்டுவழியைத் தட்டி முட்டி இடித்துப் புடைத்து நோக்கிக் குத்தினர். அவர் செய்தபோதிலும் வழிவிடாமல் அடைபட்டிருக்கப் பார்த்து தான் வரச்சே அந்தச் சக்காகமலத்திலேயிருக்கிற ஆயிரங்கோடி இராட்சதர்களையும் பத்திரமாயிருமென்று சொல்லி வந்தோமே. அவர்கள்தான் இப்படி காவலுடன் பத்திரமாய் அடைத்துக்கொண்டிருக்கிறார்களோ யாதோ தெரியவில்லையென்று மனதில் உத்தேசித்து இராட்சதர்கள் பேரைச்சொல்லி, அடா கடகரோமா! அடா சம்புமாலி! என்று தான் வார்த்தைசொல்லிக் கூப்பிட, அப்போது வாயுதேவன் மயிலிராவணன் கூப்பிடுகிறானென்றறிந்து நீ ஆரடா வென்று கேட்க, அப்போது மயிலிராவணன் கேட்டு ஆரடா அங்ஙனம் பேசுகிறது. குரல் வேறாயிருக்கிறது. அங்கே ஆயிரங்கோடி இராட்சதர்கள் இருந்தார்களே அவர்களிருக்கிறார்களா? அவர்கள் பேசுங்குரல் வேறாகின்றது. உன் பேரென்ன? உன் ஊரென்ன?என்றுகேட்க, அப்போது வாயுபகவான் ஆரடா? இங்ஙனம் வந்து நீதானா கூப்பிடுவதென்று கேட்க, மயிலிராவணன் கேட்டு நான் பாதாளயிலங்கைக் கரசன் இவ்விடம் யாரிருக்கின்றது? வழிவிடடா வென்று சொல்ல; வாயுபகவான் மயிலிராவணனைப் பார்த்து அடா யிலங்கை மன்னா! நீதானா கூப்பிடுவது நான்தான் வாயுபகவான். அனுமார் கட்டளைப்படிக்கு நானிங்கு வழிகாத்திருக்கிறேன். யாவரையும் விடப்போகாதென்று சொல்ல, மயிலிராவணன் வாயுபகவானைப் பார்த்துச் சொல்லுகிறான்.

ஓ வாயுபகவானே! உன்குமாரனும் நானுமனேகம் சண்டைபண்ணினோம். அப்போது அனுமாரும்கோபம்

வந்து பலவிதமாய்த் தாருமாருயடித்து, அதம்பண்ணி னர். அப்போது என்னுடைய மாய்கைகளிலே அவனென்ன செய்தபோதிலும் அதற்கஞ்சாமல் என் பேரில் சண்டைக்குமிஞ்சாமல் ஆச்சரியமாய் தப்பித்துக் கொண்டேன். ஆகையால் ஆஞ்சநேயர் மகாவல்லமை சாலியென்று வெகுவாய் மெச்சிக்கொண்டேன். என்னை யாவரும் மெச்சிக்கொண்டார். நாங்களொருவருக்கொரு வர் சந்தோஷப்பட்டு உன்னுடையகுமாரனுக்குப் பாதா ளவிலங்கையைப் பட்டங் கட்டிவைத்தேன். நான் வெளி யேபோகவேண்டும். எனக்கு நீவழிவிடும்பிள்ளாயென்று சொல்ல, வாயுதேவன் கேட்டு தனக்குள்ளே யோசனை செய்து மனந்துணிந்து சகலமு மறிந்துக்கொண்டு மயிலிராவணனைப்பார்த்து புன்சிரிப்புகொண்டு அடடா ராக்ஷதப்பயலே! நானுன்னுடைய மாய்கைக்கு அகப் படுவேனே? ஆஞ்சநேயர் உத்தரவில்லாமல் உன்னைப் போகவிடுவேனே?பயித்தியக்காராபோவென்றுசொல்ல, அப்போது வாயுபகவான், யோசனைசெய்து இந்தமயிலி ராவணன் மாயாவினேதி;வேறேவழி பண்ணிக்கொண்டு போனலும் போவான்; நமக்கிந்த வில்லங்கத்தை முன் னமே ஆஞ்சநேயரானவர் நம்மோடு சொல்லிப்போ னரே யாராகிலும் பலவந்தம்பண்ணினலென்னை நினை யென்று சொன்னரே. ஆகையால் அனுமாரை யழைப் போமென்று மனதில் நினைத்துக்கொண்டு மயிலிராவண னைப் பார்த்துச் சொல்லுகிருன். அடா வாடா ராக்ஷதப் பயலே! நான் வழிவிட உத்தரவில்லை. நீ அவருக்குப் பட்டங்கட்டிவைத்தேனென்று உன்னை அவர் வெளியே போகச்சொன்னரென்று சொன்னையே. அது மெய் யானல் நீயந்த அனுமாரை அழைத்துவந்து எனக்குச் சொல்வாயானல் அதன்பிறகு உனக்கு நான் வழி விடுகி றேன், அழைக்காவிட்டால் இப்போதே அந்த அனு மாரை யழைக்கிறேனென்று பிரதிக்கினைகூறி, ஆஞ்ச நேயரை நினைத்து ஓ ராமகாரிய துரந்தரா! அனு மந்தா! வாருமென்று ஆஞ்சநேயரைக் கூப்பிடுகிற போது, அவர் இலங்கைப் பட்டணம் நானூறு தெருக் களுந்தேடிக் காணமல் விசாரத்துடனே முத்துக்கோட் டையின்மேலேறி நான்குமூலையு மாராய்ந்து பார்த்து கண்ணுக்குப் புலப்படாமல் அங்ஙனம் உட்கார்ந்து

கொண்டு தலைமேலே கையைவைத்து விசாரப்பட்டுக் கொண்டிருக்கிற வேளையிலே வாயுபகவான் அழைக்க, திடுக்கென்றெழுந்து வாயுவேக மனோவேகமாய் ஓடி வரும்போது, மயிலிராவணன் ஆஞ்சநேயரைப்பார்த்து நடுநடுங்கி நாமென்ன மாய்கையெடுத்து மறைந்து போவோமென்று இருந்தாப்போலேயிருந்து ஒரு மத யானையாய் நான்கு கொம்புடனே ஸ்தூலசரீரமெடுத்து ஓடலுற்றான். அப்போது அனுமார் வாயுபகவானே! நீர் யாதுகாரியமாக என்னை யழைத்தீரென்று கேட்க, வாயுபகவான் ஆஞ்சநேயருக்குச் சொல்லுகிறார்.

வாரும் அனுமாரே! இவ்விடம் மயிலிராவணன் வந்து உமக்கு பட்டங்கட்டி வைத்தானென்றும் தன்னை விடச் சொன்னானென்றும் இவ்விதமாய்க் கூறினான். நான் வழிவிடுகிறதில்லையென்றேன். அப்போது மயிலி ராவணன் என்னைப் பார்த்து, நீ வழி விடாவிட்டால் நான் வேறே கள்ளவழிசெய்துகொண்டுபோவேனென் றான. அவ்வசனங் கேட்டு உம்மை யழைத்தேனென, அனுமார் ஓ வாயுபகவானே! இப்படித்தானல்லவோ என்னுடைய வால்கோட்டையைப் பார்த்து ஏமாற்றி விட்டுப்போனான். அவனுடைய மாய்கை எனக்குத் தெரியும். பிரமாதிகள் வந்து வழிவிடச்சொன்னாலும் விடாதே. ஜாக்கிரதையாயிருவென்று தேடிவரும்போது ஒருமதயானை நான்குகொம்புடனே ஓடப்பார்த்து, தூர தண்டியானவள் உபாயமாய் ஒரு விரலாலே யானையை அனுமாருக்குக் காட்ட, அவரந்த மதயானையை அதி வேகமாகத் துரத்திக்கொண்டு ஓடோடியும் ஐந்துவிரலை யும் முஷ்டியாகப் பிடித்து யானையினுடைய மத்தகத் தின்பேரில் குத்த அந்த யானையானது மத்தகம் பிளந்து வீறிட்டுக்கொண்டு சாக, அந்த யானைக்குள் இருந்த மயிலிராவணன் வெளியே புறப்பட்டு ஆஞ்ச நேயா! நானுன்கையி லகப்படுவேனோ? என்னுடைய பராக்கிரமத்தைப் பாருமென்று மாய்கையினாலே ஒரு ரதத்தை சகல ஆயுதங்களோடு மகாவுன்னதமாய் க்ஷண நேரத்துக்குள் உண்டுபண்ணி அனுமாரைப் பார்த்து, இலங்கைமன்னன் சொல்லுகிறான். அடா வானரா! இது பரியந்தம் மாய்கையாயிருந்தேன். இனிமேல் நான் மாய்கையை விட்டு ரதாரூடனாய் வந்தேன். நான்

உன்னை விடத்தக்கதில்லை. இப்போது என்னுடைய பாணப்பிரயோகத்தைப் பாருமென்று மயிலிராவணனானவன் பிர்மசொரூபியாகிய சிவபிரானைத் துதிக்க, அவரே கதியென்றெண்ணி தீர்க்காலோசனைபண்ணி தன்வில்லை குணத்தொனி செய்து நாணேறிட்டு முதுகில் கட்டியிருந்த அம்புப் பெட்டியில் தன் கரத்தை விட்டு சில சரங்களை எடுத்து மனதில்தானே தூபதீப நைவேத்யஞ் செய்து, மந்திரோபதேசத்தோடு வில்லில் தொடுத்து விட்டான். அந்தப் பாணம் வானத்திலெழும்பி தேவர்கள் நடுங்க மின்னலிடி மழைகளோடுங்கூடி மேகங்களையும் காற்றையும் பர்வதங்களையும் இன்னுமதிக வியப்படையத்தக்க விநோதங்களையும் காண்பித்தான். அதை ஆஞ்சநேயர் பார்த்து, ஒரு கணையெடுத்து தூபதீப நைவேத்திய முதலியவற்றைச் செய்து வில்லிற் பூட்டி மந்திரோபதேசத்தோடு தொடுத்தார். அக்கணை 1-10-100 ஆயிரம்-பதினாயிரம்-நூறாயிரம்-கோடி-சதகோடி-சங்கம் மகாசங்கம் என்னும் சகல ஜனங்கள் வேடிக்கைபார்க்க நாடிற்று. பின்னும் அனுமார் கஜாஸ்திரத்தை எடுத்தார்.

அதுகண்டு மயிலிராவணன் அந்த கஜாஸ்திரத்துக்கு வைரியாகிய கேசரியாஸ்திரத்தை விட்டு அதனையறுக்க, ஆஞ்சநேயர் சர்பாஸ்திரத்தை எடுத்துவிடுத்தார். உடனே இலங்கைமன்னன் அதற்கு வைரியாகிய கருடாஸ்திரத்தை விட்டறுக்க, அனுமா ரக்கினியாஸ்திரத்தை எடுத்துவிட்டார். அவ்வஸ்திரத்துக்கு வைரியாயிருக்கப்பட்ட வருணாஸ்திரத்தை விட்டறுத்தான். இன்னும் இருளாஸ்திரத்தை விடுத்தார். உடனே சூரியாஸ்திரத்தை விட்டறுத்தான். மறுபடியும் சுராஸ்திரப் பிரயோகஞ் செய்தார். அதையும் கந்தர்வாஸ்திரத்தை விட்டறுத்தான். இதன்றி இன்னும் அநேக அஸ்திரங்களை விடுத்தார். அவைகளைப் பாவியாகிய மயிலிராவணன் முறைமுறையே கண்டித்து வந்தான். இதனைக்கண்ட தேவர்களும் மகிழ்ந்தார்கள். ஆஞ்சநேயரைப் பலவாறுகப் புகழ்ந்தாகள். இப்படி ஒருவர்க்கொருவர் அஸ்திரங்களை தோர்வையில்லாமல் பொழிந்தார்கள். அநேகர் உயிர்விட்டழிந்தார்கள். சிலரை நறுக்கிப் பிழிந்தார்கள். போர்க்களத்திலே இறந்தார்கள். ரத்தம் பரவியோடின. கணங்கள் ஆனந்தங்கொண்டு பாடின.

இப்படி சண்டப்பிரசண்டமா யுத்தம் நடத்தினர்கள். இவ்விதமாய் நடத்தியும் மயிலிராவணன் சண்டைக் கிளையாமல் சகலரும விரும்பும்படி வில்லை வளைத்து நாணேறிட்டு விற்குணத் தொனிசெய்து வலிய பாணங் களைத் தொடுத்து சிங்கநாதஞ் செய்தான். சோனைமழை போலச் சரமாரிபெய்தான். ஆஞ்சநேயா அவன் தொடு த்துவிட்ட பாணங்களையெல்லாம அறுத்துவிட்டு இராம மூர்த்தியையடுத்து அவரே நமது கடவுளென்றெண்ணி யோசனைபண்ணி அடா! மயிலிராவணு? நான் இனி சோாவேனென்றெண்ணுதே உன்மனதில் ஆலோசனை பண்ணுதே, நானே யுத்தத்தில கைதேர்ந்தவன, இராம மூர்த்தியோடு சோநதவன். பெரியோரனுக்கிரகம பெற் றவன். ஆகையால் நீசாக்கிரதையாயிரு இதோ பாரென றுசொல்லி அஸ்திரத்தை யெடுத்து வில்லிற்றொடுத்துச் சோனைமாரி பெய்வதுபோலச் சரமாரி பெய்தார். அதை மயிலிராவணனுமவன் கண்டு அஸ்திரங்களையெலலாம் நடுப்பாதியிற் கண்ட துண்டமாகச்செய்து 1-10-100-ஆயி ரம் அளவுக்கு அதிகப்படும் பாணத்தை எடுத்தெடுதது தேரைச் சக்கைசக்கையாகப் பேர்த்தெறிநது கொடியை யறுத்து குடையைப் பூமியிலே தள்ளி குதிரைகளைக் கொன்று சாரதியை வெட்டி வில்லை நறுக்கி நாணியை யறுத்து கவசத்தைப் பொடியாக்கி மார்பைப் பிளந்து உடலமுழுதும் ரத்தமயமாககி ரதகஜதுரகபதாதிகளைக் கவிந்து சரங்களைத தூண்டி கண்டதுண்ட மாக்கினன். ஆஞ்சநேயர் ஸ்மரணை தப்பி வில்லின்மேலும் மற்ற ஆயுதங்கள்மேலும் செல்லுங் கருத்தைவிட்டு சோர்ந் தாபபோலிருந்து களைதெளிந்தெழுந்து, அப்பா! இவன் குருத்துரோகி, இவனைச் சித்திரவதைசெய்து கொல்ல வேணும். மரணவஸ்தைக்குச் சரியான அவஸ்தையை இவனுக்குண்டாக்கவேணும். ஒருவேளை ஓடிப்போனு லும் போவான். இவனை விடக்கூடாதென்றுகருதி மண் வாரியிறைத்தாப்போல் வில்லை வளைத்து பாணஙகளைத் தொடுத்துஅவன் தேரையசையவொட்டாமல்சரககூடம் போட்டார். மயிலிராவணன் அதிக கோபங்கொண்டு போர்முகத்துக்குரிய கார்முகத்தைவளைத்து நாணேறிட்டு தேவர்களுக்குஞ் சகலவித குணத்தொனி செய்து பிறை முக பாணங்களுடன் சில பாணஙகளைத் தொடுத்து தன்

தேரை மூடியிருக்கிற பாணங்களை ஆஞ்சநேயர்மீது தூண்டினான். அனுமார் அந்தப் பாணங்களை ஒன்றை யாகிலும் விடாமலறுத்து மூன்று திவ்வியாஸ்திரங்களை எடுத்தெறிந்தார். அந்தப் பாணங்கள் மயிலிராவண னுடைய திரேகத்தை ரத்தமயமாகச் செய்தது. உடனே மயிலிராவணன் கோபமீறி பற்களை நெறநெறவென்று கடித்து மீசை படபடவென்று துடிக்க, அட்டகாசஞ் செய்து அளவற்ற கணைகளைத் தொடுத்தான். அக்கணை களால் ஆஞ்சநேயர் வருத்தமடைவாரென்று யாவருஞ் சொல்லிக்கொண் டிருக்கையில் ஆஞ்சநேயர் அந்தப் பாணங்களையெல்லாம நடுப்பாதியிற் கண்டித்து, அவ னோடு என்னேரமவரைக்கும் போராடுகிறதென்று அட்ட காசஞ்செய்து வில்லினிடமாக சிலபாணங்களை ஏவி மயி லிராவணனுடைய தேரைச் சக்கைச் சக்கையாகப் பேர்த் துக் குடையை ஒடித்துததள்ளி, சிலபாணங்களை விடுத்து குதிரையை சலலடைக கண்களாகத் துளைத்து, சாரதி தலையை யறுத்து, பின்னுஞ் சில கணைகளை மயிலிராவ ணன்பேரில் பிரயோகஞ் செய்து அவனணிந்துவந்த மகாகுண்டல ஆரகேயூர கடககங்கண முதலாகிய ஆப ரணங்களையும் கவசத்தையும் பொடிப்பொடியாக்கி அவ னையும் இரத்தமயமாக்கினார். அதனால் மயிலிராவணன் பிரமைகொண்டு ஒன்றுந தோன்றாமல் மனங்கலங்கி சற்றுமசைவின்றி சித்திரப் பதுமைபோல நின்றான். அத்தருணத்தில் ஆஞ்சநேயர் தமது தேரை யருகில் நடத்தி மயிலிராவணன தேரில் தாவி, தன் வில் நாணி யினால் அவனை மடல்விரியக் கட்டி தனது தேர் குத்துக் காலிலிருத்தி கட்டிச் சிங்கநாதஞ் செய்தார். பாதாள மன்னன மூர்ச்சை தெளிந்து கண்விழித்துப் பார்த்து கர்ஜித்து கட்டில் நினறு திமிரிக்கொண்டு வெளிப்பட்டு காலாக்கினி உருத்திரனைப்போலக் கோபமீறி மறுதேரி லேறி அனுமாரெதிரில்வந்து தேரைத்தூண்டி அநேக தவங்களைச் செய்து வரப்பிரசாதங்களைப் பெற்ற சில அஸ்திரங்களை விடுத்தான். அதைக்கண்ட ஆஞ்சநேயர் சில அஸ்திரங்களை விடுத்து அவ்வஸ்திரங்களை அப் போதுக்கப்போது கண்டித்தார்.

இப்படி இருவரும் காலாக்கினி ருத்திரனைப்போல் சண்டப்பிரசண்டராய் ஒருவர்க்கொருவர் தோர்வையடை

யாமல் போர்புரிந்கார்கள். அப்போது மயிலிராவண னவன் அக்கினியாஸ்திரம் வருணாஸ்திரம் முதலான ஆயிரத்தெட்டு அஸ்திரங்களும் பிரயோகஞ் செய்ய, ஆஞ்சநேயர் அதிக கோபத்துடனே உக்கிராகாரனாய் கண்களில் நெருப்புப் பொறிபறக்க, இருபுஜங்களுந் துடிக்க பற்களை நெறநெறவென்று கடித்து அவனது உதிரத்தை மடமடவென்று குடிக்க விஸ்வரூபமாய் பதி னாயிரம்யோசனை விஸ்தாரமாகத்தோன்றும்படி ஸ்தூல சரீரமெடுத்து மயிலிராவணனைப் பார்த்து அவன் தேரின்பேரில் ஓரறை யறைந்தார். அப்போது அவ் வறையினால் அந்த இரதம் அச்சுவேறு ஆணிவேறு கொடுங்கைவேறாக சின்னாபின்னப்பட்டு பொடிப்பொடி யாய் போயிற்று.

மயிலிராவணன் ஆஞ்சநேயர் வருகிற குரூரரூபத் தையும் அவரது கோபத்தையுங் கண்டு மனதில் திகில் கொண்டு நடுங்கி ஒடுங்கி தேரைவிட்டுக் கீழே குதித்து கையில் கத்தி கேடயம் பாலா முதலியன பிடித்து பட படவென்று துடிக்க, தடதடவென் றோட்டமாக ஓடி வந்து ஆஞ்சநேயருடைய நடுமார்பில் கத்தியினால் ஓங்கி வெட்ட, அவர் எமலோகத்தைக் கிட்ட இவ்விதமாய் தட்ட ஆஞ்சநேயர் யாதொன்றுக்குஞ் சட்டைபண்ணா மல் தன் வாலைக் கீழேவிட்டு மயிலிராவணனுடைய இர ண்டு காலையு மெட்டிப்பார்த்து அடா இராக்ஷதப்பயலே? இனிமேல் எங்கேயாவது ஓடிப்போகலாமோ வென்று ஆலோசிக்கிறாயோ வென்று சொல்லி கர்ச்சித்து பதி னாயிரம் யோசனை தூரம் வளர்ந்து அவனுடைய மார்பி லிடதுகாலும் விந்தியாசல பர்வதத்தில் வலதுகாலு மூன்றிக்கொண்டு அந்தவிந்தியாசலப் பர்வதத்திலந்து குகைக்குள் நடுவாயிருக்கிற துவாரத்தைக் கண்டு அந்த துவாரமைந்தையும் இடதுகையில் மூடிக்கொண்டு வல துகையைத் துவாரத்தில் புகவிட்டு தடவிப் பிடிக்கையில் வண்டுகளைந்தும் ஆஞ்சநேயரஸ்தம் வருவதைக் கண் டு வெளியே புறப்பட்டு போவோமென்று வாசலில் வந்து பார்க்கும்போது, அவ்வாசலானது ஆஞ்சநேய ருடைய உள்ளங்கையால் மூடியிருப்பதைக்கண்டு, அந்த வண்டுகளானது பயந்து வெளியே புறப்படாமல் மூலை க்குமூலை ஓடி உள்ளே ஒளித்திருந்தது. அவருடைய

கையிலகப்படாமலிருக்க, அவருபாயமாய் விரலினுலே பிடித்து நகத்தினுலே சேர்த்துக்கொண்டு இரண்டாந் துவாரத்திலிருக்கிற வண்டையும் பிடித்துக்கொண்டு மூன்ருந்துவாரத்தில் கையைவிட்டு அதிலிருக்கிற வண் டையும் பிடித்து நான்காந் துவாரத்தில் கரத்தைச் செலுத்தி அதிலிருந்ததையும் பிடித்து ஐந்தாம் துவா ரத்தில் இருப்பதையும் பிடித்துக்கொண்டு, இவ்வைந் தையும் உள்ளங்கையிலடக்கிதேய்த்து மாயத்துப்போட, அந்த வண்டுகளின் பிராணன் போய்விட அதிவேக மாய் ஓடி இராவணனைத்தேடி யலைந்து வந்து அவன் பாதத்திற் பிரவேசிக்க, மயிலிராவணன் தன் பிராணன் தனதுடலிற் புகுந்ததைப் பார்த்து, அவன் சிரசை யசைத்து ஆ! இதென்ன ஆச்சரியம்! நமக்கின்ருேடே மரணகாலம் நேரிட்டிருக்கின்றது. ஆகையால் இந்த ஆஞ்சநேயர் கையில் வண்டுகள் ஐந்தும் அகப்பட்டு நடுங்கினதென்று அறிந்துக்கொண்டு, ஆகாயவாணி சொன்ன விசேஷத்தையும் ஆஞ்சநேயர் வீராவேசத் தையும் பார்த்துக்கொண்டிருக்கச்சே,மயிலிராவணனுக்கு ஞானசரமானது சம்பூரணமாய் நிறைந்து ஆஞ்சநேய ரைப்பார்த்து தோத்திரம்பண்ணுகிருன்:வாருமனுமந்த சேயா! வஜ்கரநாமா! ஸ்ரீராமகாரிய துரந்தரா! வாயுகுமா ரகா! அஞ்சனுதேவி புத்திரா! ஸ்ரீகாரிய பரிபூரணு! கரு ணுகரா! காருமையா சுவாமி யென்று பலவிதமாகத் தோத்திரஞ் செய்து சுவாமி நான் செய்த குற்றங்கள் யாவும் பொறுத்து ரக்ஷிக்கவேண்டும். இராமதூதா! ராமதுரோகம் பண்ணும் பாவியாகிய நான் உன் பாதா ரவிந்தங் காணப் பெற்றேன்; வைகுண்டபதவி பெற் றேன்; நீர் வந்த காரிய மீடேறிற்று; சீக்கிரமாய் நீல மேகனுக்குப் பட்டங்கட்டிவைத்து ராமலட்சுமணுளை எடுத்துக்கொண்டுபோய் இராவணசம்மாரஞ் செய்து வையும் ஐயாவென்று தோத்திரம் பண்ணிக்கொண் டிருக்கச்சே பாதாளவிலங்கைக் கரசனுகிய மயிலிராவ ணன் ஜீவனனது வைகுந்தபதவி யடைந்தது. அவ னுக்கு தெய்வலோகத்திலிருந்து புட்பகவிமானம் வந் தது. அந்த புட்பகவிமானத்தி லேறிக்கொண்டு தேவ ஸ்திரீகளாகிய அரம்பை, மேனகை,ஊர்வசி, திலோத் தமை முதலான ஸ்திரீகள் நடனமாடவும், வெண்

சாமரைபோடவும், இவ்வித ஆடம்பரத்துடனே புட்பக விமானத்தில் இருந்தபடியே ஆஞ்சநேயரைக் தரிசனஞ் செய்துக்கொண்டு நான் போய்வருகிறேனென்று வீர சொர்க்கத்தையடைந்தான். அப்போது அந்தப் பாதாள லெங்கையில் சில ராக்ஷதர்களிருக்கப் பார்த்து, ஆரடா இராக்ஷதர்களே! நீங்கள் சீக்கிரமாய் நீலமேகன் தூர தண்டி இவர்களை யழைத்து வாருமென்று சொல்லவே அக்கணமே அழைத்து வந்தார்கள். தூர தண்டி நீலமேகன் இவ்விருவரும் ஆஞ்சநேயர் பாதத்தில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து கை கட்டி வாய்புதைத்துக்கொண்டு நிற்க, ஆஞ்சநேயர் நீலமேகனைப் பார்த்து அடா வாடா நீலமேகா! இந்த மயிலிராவணனுக்கு விந்தியாசல பர்வதத்தில் வலதுகாலை யூன்றிக்கொண்டு அந்த விந்தகிரியை முதலியன எவ்வண்ணம் முடியவேண்டுமோ அவ்வண்ணம் முடித்துவா வென்று கூறி சூரிய உதயத்திற்கு முன்னே இராமலட்சுமணனைக் கொண்டுபோய் இராவணசம்மாரஞ்செய்யவேண்டும். பின்பு ரூபவதியென்கிற பெண்ணை கலியாணஞ் செய்துவித்து பட்டாபிஷேகஞ் செய்ய நினைக்கிறேன். ஆகையால் நீ அதிசீக்கிரத்தில் மயிலிராவணனுக்குச் செய்யவேண்டிய சடங்குகளெல்லாம் முடிப்பித்து வரவேண்டுமென ஆக்கியாபித்து ஆஞ்சநேயர் அரண்மனைபோய்ச் சேர்ந்தார்.

அப்போது நீலமேகன் அவர்சொல்லியவண்ணம் இராட்சத பிராமணனை யழைத்து அதற்கு வேண்டிய சாமக்கிரிகைகள் யாவுஞ் சேகரஞ்செய்து வைத்துக் கொண்டு மயிலிராவணனுக்கு அக்கினி நமஸ்காரஞ் செய்வித்து ஸ்நானம்பண்ணி நீலமேகனுந் தூரதண்டிகையும் மற்றுமுள்ள இராக்ஷக பிராமணுள் யாவரும் அரண்மனையில் வந்து ஆஞ்சநேயருக்கு தோத்திரஞ் செய்து நின்றார்கள். ஆஞ்சநேயர் மாதங்கியைப் பார்த்து ஒ வாரும் பெண்ணே மாதங்கி! ஆகாயவாணி சொல்லிய வாக்குப்படி உன் குமாரத்தியை நீலமேகனுக்குக் கொடுத்து கலியாணஞ் செய்துவையுமென்று சொல்ல, மாதங்கி அனுமாரைப் பார்த்து ஒ சுவாமி! நான் உமது இஷ்டப்படி செய்கிறேன் என்று உறுதி கூறி, ரூபவதியை யழைத்துக்கொண்டு கந்தபுஷ்ப முத

லியது அணிந்து பச்சைப்பந்தல் வாழை கமுகுகளா லலங்கரித்து தம்பதிகளிருவருக்கும் வெகு விசித்திர மான ஆபரணங்களினால் அலங்காரஞ் செய்து நீல மேகன் ரூபவதி இவ்விருவருக்கும் கலியாணச் சடங்குக ளியாவும் சம்பிரமத்துடன் முடிப்பித்து மாங்கல்யந் தரிப்பித்து இரத்தின சிங்காதனமிட்டு சகலாடம்பரத் துடன் வீற்றிருக்கச்செய்து சகல ராக்ஷத பிராமணரைக் கொண்டு சுத்த தீர்த்தங்கள் கொண்டுவந்து அநுமார் முன்னே வைத்தார்கள். அதை அநுமார் அப்போது அவர் தங்கக் குடத்திலே யிருக்கிற சுத்த ஜலத்தை நீல மேகனுக்கு அபிஷேகம் செய்தபின்பு நீலமேகனான வன் சகல ஆபரண பூஷணனாய் எழுந்து ஆஞ்சநேயர் பாதாரவிந்தத்தில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ் கரித்து சிரமேற் கரங்குவித்து ஸ்தோத்திரம் பண்ணி னான. தூரதண்டி பாதகிமுதலிய சகலரும் ஆஞ்சநேயர் முன்னே விழுந்து கும்பிட்டு எழுந்து கைகட்டி வாய் புதைத்து நின்றார்கள். ஆஞ்சநேயர் நீலமேகனைப் பார்த்து ஆசீர்வாதஞ் செய்து வாரும் பிள்ளாய் நீல மேகனே! நீ இந்தப பாதாள விலங்கையைப் பரிபால னஞ் செய்துகொண்டு சுகமாக ஸ்ரீராமமூர்த்தியின் பேரும் பிரதி ஆரம்பம் எந்தமட்டில் சாஸ்விதமாயிருக் குமோ அக்காலம் வரையில சுகஜீவியாய் வாழக்கடவாய்; தர்மநீதி தவறாமல் செலுத்தக்கடவாய்; சகல உயிர்களை யும தன்னுயிர்போல மன்னுயிரைக் காப்பாற்றி வாழக் கடவாயென்று சில புத்திமதிகள் கூறி, பின்பு தூரதண் டிகையைப் பார்த்து ஓ பெண்ணே! நீ கேட்டுக்கொண்ட படிக்கு நீலமேகனுக்குப் பட்டங் கட்டி வைததேன். நான் போகச் சிலவுகொடுமென்று கேட்க: அப்போது தூரதண்டியானவள் சீக்கிரமாய்ப் போய் பொக்கிஷத் தைத் திறந்து அநேக ஆபரணங்களும் வஸ்திரமும் சந்தன புஷ்பமுதலிய பரிமளத் திரவியங்களும் கொண்டு வந்து ஆஞ்சநேயர் முன்பாக வைத்து சாஷ்டாங்க மாக நமஸ்காரஞ் செய்துக்கொண்டாள். ஆஞ்சநேயர் தூரதண்டியைப் பார்த்துச் சொல்லுகிறார்.

வாரும் பெண்ணே தூரதண்டியே! நீ கொண்டு வந்த வெகுமதிகளைப் பார்த்துச் சந்தோஷ மாயின தென்று தனதஸ்தத்தினால் தொட்டு உனக்கு அஸ்தம

பட்டவுடனே எனக்கு மனக்களிப்புண்டாயிற்று. நீ கொண்டுவந்ததை பொக்கிஷங் கொண்டுபோய்ச்சேர்ப்பி; அவ்வஸ்துக்கள் கொடுக்கக் காரணமில்லை. யாதென் ருல் சாட்சாத் கடவுளாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் இராவண சம்மார முடிப்பித்துப் பட்டாபிஷேகமான பின்பு நானந்த பூரணுதி திரவியங்களைத் தொடுவேனென்று ஆக்யாபித்து விடை கொடுத்துவிட்டு, பின்பு ஆஞ்சநேயர் மச்சவல்லபனை யழைத்து வாரும பிள்ளாய் மச்ச வல்லப சிகாமணியே! இப்பாதாள விலங்கையை உன் வசமொப்புவித்தேன். நீ நீலமேகன் சொற்படி நடந்து கொண்டுவந்து சுகமாயிரு; நான் போய்வருகிறேன் என்று ஆஞ்சநேயா விடை பெற்றுக்கொண்டு சீக்கிரமாய்ப் புறப்பட்டு இராமலட்சுமணுளை வைத்திருக்கப் பட்ட விடத்தில் வந்து பூமிதேவியைப் பார்த்து, ஓ வாராய்பூமிதேவியே!இராமலட்சுமணுளை தடையின்றிக் கொடு என்று வினவ, பூமிதேவியானவள் பெட்டியோடு தூக்கிக்கொடுக்க, இராமலட்சுமணுளைப் பத்திரப்படுத்தி யிருக்கின்ற பெட்டியோடு பெற்றுக்கொண்டு அதிசீக்கிரமாய்ப் பாதாள லங்கையைவிட்டு அந்தத் தாமரைத் தடாகத்துள் வந்து அவ்வழி துவாரத்தைப் பார்க்க அவ்வழி யடைப்பட்டிருந்தது. அங்ஙனம் காவலாயிருக்கிற வாயுபகவானைக் கண்டு ஓய் வாயுபகவானே! எனக்குச் சற்றே வழிவிடென்று சொல்லி அவர் பெட்டியை எடுத்துக்கொண்டு அந்தத் தாமரை நூற்றண்டு வழியாக அதிசீக்கிரத்தில் நடந்து அந்தச்செந்தாமரைக் கமலத்தில் வந்துசேர்ந்தார். வாயுபகவான் அவரைப் பார்த்து வாரும் பிள்ளாய் ஆஞ்சநேயா! மயிலிராவணனைச் சங்காரம் பண்ணி இராமலட்சுமணுளை எடுத்துக் கொண்டுவந்தாயா என்ன,அவர்வாயுபகவானைப்பார்த்து ஓய் வாயுபகவானே! நான் மயிலிராவணனைச் சம்மாரம் பண்ணி ஸ்ரீராமலட்சுமணுளை இந்தப் பெட்டியோடே எடுத்துவந்தேனென்ன,அப்போது வாயுபகவானுனவர் அதிக சந்தோஷத்தை யடைந்தார். அப்போது பாதாள லங்கையிலிருந்த மச்சவல்லபன் அந்நகரைவிட்டு பாட்டனுருந் தகப்பனுருமிருக்கிற விடத்தில்வந்து சேர்ந்து அவர்களிருவருக்கும் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து கைகட்டி வாய்புதைத்து நின்றுன்.

அப்போது வாயுபகவான் ஆஞ்சநேயரைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ வாரும் ஆஞ்சநேயதூதா! அரிராம சகாயா! ஸ்ரீராமலட்சுமணுளை கொண்டுவந்தேனென்றாயே! அவர்களைப் பாக்க எனக்கு விருப்பமாயிருக்கிறதென்று கேட்க, மச்சவலலபனும் அவர்களெப்படிப்பட்ட புண்ணிய புருஷரோ நானும் பார்க்க விருப்பமுள்ளவனுயிருக்கிறேனென்று இருவரும் கூற, ஆஞ்சநேயர் அந்தப பெட்டியை எடுத்துக்கொண்டு வந்து இதோ திறக்கிறேன் பாருங்களென்று பெட்டியைத் திறக்க, அப்பெட்டியில் ராமலட்சுமணுளிருவரும் நித்திரை செய்திருக்க, அத்தருணத்தில் வாயுபகவான் ஆஞ்சநேயர் மச்சவல்லபன் இம்மூவரும் முக்கால் வலம்வந்து ஸ்ரீராமலட்சுமணுளுக்கு சாஷ்டாங்கமாய் நமஸ்காரஞ்செய்து பெட்டியைத் தாட்கொண்டு பூட்டி ஆஞ்சநேயர் மச்சவல்லபனைப் பார்த்துச்சொல்லுகிறார். ஓ மச்சவல்லபா! நீ இங்குவந்த காரியமென்னவென்று வினவ, மச்சவல்லபன் சொல்லுகிறான். ஓ ஆஞ்சநேயரே! நாளையதினம் முதல் காலையில் இராவணனுடனே யுத்தஞ் செய்யவேண்டும். ஆகையால நானே அந்த இராவணனுடைய இராட்சதப் பூண்டுகளெல்லா மடித்து வீருவேசப்படுத்தி பின்பு இப்பாதாள விலங்கைக்கு வருவேனென்ன ஆஞ்சநேயர் மச்சவல்லபனைப் பார்த்துச் சொல்லுகிறார். ஓய் வாரும் மச்சவல்லபா! நீ அவ்விடம் வநதால் அந்த சுக்ரீவன் முதலான யாவரும் இவனாரென்று என்னைக் கேட்பார்கள். அப்போதவர்களுக்கு எனனுடைய பிள்ளையென்று சொல்லநேரிடும். அப்படியிருப்பதால் அவர்கள் சந்தேகப்படவும் பரியாசஞ் செய்யவும் விருதாவாகிலும் பிள்ளையென்று ஒப்பாரி பிடித்துக்கொண்டு வந்தானென்றும் உனக்கு அபகீர்த்தியாதலால் நீ அவ்விடத்திற்கு வரவேண்டியதில்லை. இந்த லங்கைப் பட்டணத்தில் சுகமாயிருமென்று விடைகொடுத்து வாயுபகவானை யனுப்பிவிட்டு இராமலட்சுமணுளை பெட்டியோடே எடுத்துக்கொண்டு வாயுவேகமாய் வரும்போது சுக்ரீவன் அங்கதன் நீலன் நளன் சாம்புவந்தன்முதலிய யாவரும் ஒன்றாய்க் கூடிக் கொண்டு ஆஞ்சநேயர் வரவில்லையே; சூரியோதயமாகின்றதே என்று வருத்தப்பட்டு நான்கு மூலையும்

பார்த்துக்கொண் டிருக்குந் தருணத்தில் ஆஞ்சநேயர் வருவது கண்டு, அனைவோரு மெதிர்சென் றழைத்துக் கொண்டு கூடாரம் வந்துசேர்ந்தார்கள். ஆஞ்சநேய ரானவர் பெட்டியோடே இராமலட்சுமணுளை அசையா மல் எப்போதும்போல் முன்னிருந்தவிடத்தில் வைத்து பிரதட்சணமாய் வந்து கும்பிட்டார்கள். அங்கதன் நீலன் சுக்ரீவன் விபீஷணன் முதலானவர்களெல்லாம் இடப்புரி வலம்புரியாய்வந்து தோத்திரஞ்செய்து நிற்க, சூரியபகவான் உதயகிரிபர்வதத்திலிருந்து தன் கிரணங் களைப் பரப்பிப் புறப்பட்டான். ஸ்ரீராமலட்சுமணுளை வைத்திருந்த பெட்டியானது மாயமாய் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துபோயிற்று- இராமலட்சுமணுள் இருவரும் நித்திரை தெளிந்து எழுந்திருந்தார்கள். ஆகாயமார்க்கத்திலே சகல தேவர்களும் புட்பமாரி பொழிந்தார்கள். மங்கள வாழ்த்துப் பாடினுர்கள். நான்கு மாதரும் நடனமாடினுர்கள். தேவகணங்கள் கூத்தாடினுர்கள். சகல ஜனமும் பார்க்க ஆச்சரியத் துடனே வந்து கூத்தாடினுர்கள்.

இன்றையதினம் இதென்ன ஆச்சரியமாயிருக்கிற தென சந்தேப்பட்டு யாருடனே போர்க்கொடுப்போ மென்று இராமலட்சுமணுள் கேட்க, ஜாம்புவந்தனுன வன் இந்தப் பூர்வோத்திர மெல்லாம் ஸ்ரீராமமூர்த்திக் குச் சவிஸ்தாரமாகச் சொல்லத் தொடங்க, ஆஞ்சநேயர் சாம்புவந்தரைப் பார்த்து, கண்சைகையாய் சொல்லாதே யென்ருர். அவர் சைகையை யறிந்துகொண்டு இராம லட்சுமணுளைப் பார்த்து சொல்லுகிருர். வாருமையா ஜகத்ரட்சகா! ராமச்சந்திரா! யான் சொல்லுகிறேன்; சற்றே வினவக்கேளும், வாரும், இந்த இராவணனை சம்மாரம்பண்ணப் போகச்சே, தேவர்கள் புட்பமாரி பொழிந்தார்கள் இராமலட்சுமணுள் சந்தோஷமடைந் தார்கள்.

இங்ஙனமிப்படியிருக்க, இலங்கைப் பட்டணத்தில் இராவணன் ஸ்திரீகளோடு சரசசல்லாப வுல்லாசமாய்ச் சிரித்துக்கொண்டு இருந்தவன் சூரியவுதயத்தில் தேவர் கள் கருடகாந்தருவர் முழங்கப்பட்ட மேளவாத்தியத் தொனிகள் அவ்விடம் கேட்கும்படியான காரணமென்ன? அந்த இராமலட்சுமணுளை மயிலிராவணன் கொண்டு

போனதற்கு தேவர்களுக்கு இத்தனை சந்தோஷம்வரக் காரணமென்னவென்று அவ்விடத்திலிருக்கும் எட்டு பேர் வேவுகாரரை அழைப்பித்து, அக்கணமே பாதாள விலங்கைக்குச் சென்று மயிலிராவணனிடத்திற் போகாமால் வானரசேனை யண்டைக்குப்போய் இராமலட்சுமணுள் உயிருடனே க்ஷேமமாயிருக்கிறார்களா? அவர்களுடைய சேதியை விசாரித்துக்கொண்டு வாருங்களென்ன, அந்த வுத்தரப்படியே வேவுகாரர்கள் பாதாள விலங்கைக்குச் செல்லாமல் வானரசேனை இருப்பிடம் வந்து விசாரிக்குமளவில் இராமலட்சுமணுள் சுகமாயிருக்கிறார்களென்று சொல்ல இராவணன இதேது ஆச்சரியமாயிருக்கின்றது. மயிலிராவணனைக் கொன்றுவிட்டார்களோ? அல்லது அவன் அவர்களிருவரையும் எடுத்துக்கொண்டு போகாமல் தனியாய்ப் போனானோ வென்று மனதில் பலயோசனை செய்து, எட்டுபேர் வேவு காரரை யழைப்பித்து சொல்லுகிறான். ஓ தூதர்களே! நீங்கள் சீக்கிரமாகப் பாதாளவிலங்கைக்குப்போய் மயிலிராவணனிருக்கிறானா? இல்லையா வென்று பார்த்து வாருங்களென்று சொல்ல, எட்டுபோ வேவுகாரர்கள் அதிசீக்கிரமாய் பாதாளவிலங்கைக்குப் போகவேணுமென்று தாமரைக் குளத்தில் வந்து இராட்சதரெல்லோரும் அங்கு இல்லாதிருப்பதைப் பார்த்து, அவ்விடத்தில் நூதனமாய் நீலமேகனும் அவன் சேனைகள் யாவரும் காவலாகயிருக்கிறதைப் பார்த்து, அந்த எண்மரும் சொல்லுகிறார்கள். வாருங்கள் இராட்சதப் பேய்களே! இலங்கையில் இருக்கப்பட்ட நாய்களே! மயிலிராவணனெங்கே? அந்தக்கோட்டையில் ஆயிரங்கோடி இராட்சதாள் காவலாயிருந்தார்களே அவர்கள் எவ்வாவாறுயினார்கள். நாங்கள் சதகண்ட இராவணனாலே அனுப்பப்பட்டவர்கள். மயிலிராவணனைக் காணவந்தோம், வழிவிடுங்களென்று எண்மருங் கேட்க காவலர்கள் சொல்லுகிறார்கள்; ஆரடா நீங்கள் சதகண்டராவணன் பேச்சை யெடுக்கவேண்டிய காரணமென்னவென்றுகர்ஜித்து பற்களை நெறநெறவென்று கடித்து மீசைகள் படபடவென்று துடிக்க, கோபங்கொண்டு பிடரியைப் பிடித்து தள்ளுங்கள் தள்ளின பின்பு சேதிவந்து சொல்லுங்களென, அப்போது வேவுகாரர்கள் காவலா

யிருக்கப்பட்ட ராக்ஷதாள் காலில் விழுந்தெழுந்து நடுங்கி ஒடுங்கி சொல்லவேண்டுமென்று வேவுகாரர்கள் கேட்கக் காவலர்கள் அவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார்கள்.

வாருங்கள் வேவுகாரர்களே! அனுமார் மயிலிராவணனை அதஞ்செய்து நீலமேகனுக்குப் பட்டங்கட்டி ஸ்ரீராமலட்சுமணனை எடுத்துக்கொண்டுபோனார். ஆகையால் அவருடைய உத்தரவில்லாமல் இங்ஙனம் சற்றேனும் நிற்கக்கூடாதென்று சீக்கிரத்தில் நெட்டித் தலையேற் குட்டி பிடரியைப் பிடித்துக் கழுத்தைக் கடித்து தள்ளிவிட்டார்கள். அவர்கள் படைத்த பூசையை ஆசையோடு பெற்றுக்கொண்டு நமக்கு நாசமாகிற நாசகாலம் வந்ததென்று மனதில் விசாரங்கொண்டு அவ்விடம் புறப்பட்டு லங்காபுரியை யாளப்பட்ட இராவணனிடத்தில் வந்து மகாதுயரத்துடனே சொல்லுகிறார். வாரும் இலங்காதிபா! மயிலிராவணன் புத்திர மித்திர களத்திராதியுடனே அனுமாரால் எமபுரத்தை யடைந்தான். இராட்சதப் பூண்டுகள் சகலமு மழிந்துவிட்டது. நீலமேகன் பாதாளவிலங்கையைப் பட்டங் கட்டிக்கொண்டு அரசுசெலுத்தி வருகிறானென்று சொல்ல, அந்த விசேஷத்தை சதகண்டராவணன் கேட்டு சிங்காதனத்தின்மேலிருந்து கீழே விழுந்து கடகடவென்று புரண்டு மூர்ச்சையாகிக் கிடக்கிற இராவணனை மகோதரன் முதலிய மந்திரிகளெடுத்து ஆயாசந்தீரப் பாயாசந் தந்து சோடசோபசாரஞ் செய்து மூர்ச்சை தெளிவித்து அவனுக்குத் தேருதலைச் சொன்னார்கள். இராவணன் மந்திரிகளைப் பார்த்துச் சொல்லுகிறான்: வாரும்மந்திரிமாரே! ஆராய்ந்து சொல்லும் மந்திரிகளே! எனது துயரத்தை என்னாற் சொல்லமுடியுமோ? யான்செய்த எத்தனமெல்லாம் அதமாயின. மகாசமர்த்தனான என் தம்பியும் பிள்ளைகளுமிறந்துபோய் என்னையல்லாது யாதொன்றிலும் யுத்தி செல்லாது எனது காரியமும் பொல்லாது க்ஷணநேரமில்லாதென்று மனதிலெண்ணி யோசனைபண்ணி திடங்கொண்டு தன்னுடைய தேரைக் கொண்டுவரச்சொல்லி யானை சேனை பரிவார முதலியவற்றைச் சேர்த்துக் கொண்டு யுத்தகளத்தில் வந்து ஸ்ரீ இராமமூர்த்திபேரில் எதிர்த்து வில்லைவளைத்து நாணேறிட்டு அநேகபாணங்களை விடுத்தான்.

அதுகண்டு ரகுநாயகரானவர் அதிககோபத்துடனே தமது கோதண்டத்தை வளைத்து நாணேறிட்டு இராம பாணங்களை யெடுத்து சரவருஷம் பொழிந்தனர். அந்தப் பாணங்களால்இராவணேஸ்வரனுடைய யானைகள் குதிரைகள் தேர்கள் மந்திரிகள் படைத்தலைவர் முதலிய யாவரும் இரணக்களத்தில் விழுந்தார்கள். இராவணன் தனியாய் நின்று யுத்தஞ் செய்தான். இதுகண்ட இராம மூர்த்தியானவர் இதுஎன்ன இவனுடைய போராட்டம் நமக்கு மாருட்டமா யிருக்கிறதென்று கோபங்கொண்டு தனது வில்லினிடமாய் அதி தீட்சண்யமான இராம பாணங்களை எடுத்துத் தொடுத்துவிட்டார். அந்தபாண மானது இராவணனுடைய மார்பிலேபட்டு முதுகி லுருவிப்போயின. இராவணன் தலைகள் பலவாருய்ப் பூமியில் விழுந்தன. பின்பு ஸ்ரீராமமூர்த்தி விபீஷணருக்கு உபசாரஞ்செய்து இராவணேஸ்வரனை எடுத்துத் தகனஞ் செய்யச்சொல்லி உத்திரவு கொடுத்தார். உடனே விபீஷணர் இராவணனை எடுத்துத் தகனஞ்செய்து பதினாருநாள் கருமாதி காரியத்தை நடத்தினர். அதுகண்டு ரகுநாயகர் விபீஷணருக்கு இலங்கைப் பட்டணத்தைப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்து சீதாதேவியை அழைத்துவரச்சொல்லி விபீஷணர் - சுக்ரீவன் - அங்கதன் - நளன் - குமுதன் - குமுதாக்கன் - சாம்புவந்தன் முதலிய சேனைத்தலைவரும் எழுபத்திரண்டு வெள்ளஞ் சேனையும் ரதாரூடராய் வரச்சொல்லி ஆஞ்சநேயருடன் புறப்பட்டு ஸ்ரீராமலட்சுமணர் சீதாபிராட்டி சமேதராய் விமானத்திலேறிக்கொண்டு சேனைகள் நடக்கும்படி ஆக்யாபித்து தமது விமானத்தையும் நடத்தி பரத்துவாசா ஆசிரமத்திலிறங்கினர்கள். அப்போது ஆஞ்சநேயர் முன்னதாய்ப் போய் பரதருக்குச் சுகச்சேதி சொல்லவேண்டுமென்று ரகுநாயகரிடத்தில்விடைபெற்று அயோத்தியாபட்டணம் வந்து பரதனைக்கண்டு சுவாமி வருகிற சமாச்சாரத்தை விபரமாகச்சொன்னர். பரதர் சந்தோஷப்பட்டு பட்டணமெல்லா மலங்காரஞ் செய்வித்துத் தானும் சத்துருக்கர் முதலானவரோடு தம்பிமார்களையு மழைத்துக்கொண்டு அநேக யானை சேனை குதிரைகளுடன் பட்டணத்திலுண்டாகிய சகலமான ஜனங்களோடு எதிர்கொண்டு போனர்.

அப்போது ரகுநாயகர் பரத்துவாசர் ஆசிரமத்திலே போஜனஞ் செய்து பரத்துவாசரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு சகலசேனைகளுடனே புறப்பட்டு அயோத்தியை நோக்கி வரும்போது எதிர்கொண்டு வருகிற பரதனைக்கண்டு ரகுநாயகர் ரதத்தை நிறுத்தினர். உடனே பரதர் ஸ்ரீராமமூர்த்திக்கு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தார். ரகுநாயகர் பரதரைக் கட்டிக்கொண்டு ஆலிங்கனஞ்செய்து அதிக சந்தோஷத்துடனே சதுரங்க சேனைகளோடு பிரயாணப்பட்டு தம்முடைய தாயாராகிய கௌசலாதேவி யம்மனை நமஸ்கரித்து கைகேசி சுமித்திராதேவியம்மா ளிருவருக்கும் வந்தனஞ் செய்து சகல பேரையும் தேரிலேற்றிக்கொண்டு சந்தோஷமான சமாச்சாரங்களையுஞ் சொல்லி சகல ஜனங்களுடனும் நந்திக்கிராமத்தில் வந்திறங்கி கங்காஸ்நானம் செய்து வஸ்திராபரணம் கந்தபுஷ்ப பரிமள வர்க்கங்கள் முதலியது மணிந்துகொண்டு திவ்விய அன்னம் புசித்து தாம்பூல வர்க்கந் தரித்து அதிக சல்லாப உல்லாசமாய் அயோத்யாபுரி பட்டணத்துக்குப்போய் ஸ்ரீராமமூர்த்திக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்து சகல பிரஜைகளும் ஆனந்தமடைந்திருக்குந் தருணத்தில் சுக்ரீவன் விபீஷணர் முதலானவர்கள் எழுபத்திரண்டு வெள்ளம் வானர சேனைகளும் உபசாரம் செய்துகொண்டிருக்க, ஸ்ரீராமமூர்த்தியானவர் வதிஷ்டரைப் பார்த்து ஓர் விசேஷம் சொல்லுகிறார்.

ஐயா வாரும் சுவாமி வதிஷ்டமகாமுனியே! இதோ யிருக்கிற ஆஞ்சநேயர் எங்களுக்கு அநேகஞ் சகாயஞ் செய்திருக்கின்றனர். அவர் செய்திருக்கிற உபகாரத்துக்குத் தேவராலும் யாவராலும் பிரதியுபகாரம் செய்யமுடியாதென்று ஸ்ரீராமமூர்த்தியானவர் சொல்ல, வதிஷ்டர் சொல்லுகிறார். வாருமையா இராமச்சந்திரா! ஆஞ்சநேயர் அநேக உபகாரங்கள் செய்தாரென்று சொன்னீரே. அவர்செய்த உபகாரத்தை யாவருமறியார்கள். இன்னதென்று குறிபார்கள். அவர்செய்த காரியார்த்தமென்ன? நம்மையறியாமல் என்ன அற்புதஞ்செய்தார்? நமக்குச் சகல காரியமும் ஞானதிருஷ்டியினால் தெரியும். அவர் செய்த வுபகாரத்தைச் சொல்லவேண்டுமென்று கேட்க ரகுநாயகர் விபீஷணரை நோக்கிச் சொல்லச்

சொன்னார். விபீஷணர் சாம்புவத்தரைப் பார்த்து, ஐயா சாம்புவந்தரே! ஆஞ்சநேயர் மயிலிராவணனைச் சம்மாரஞ்செய்த சவிஸ்தாரத்தைச் சொல்லவேண்டுமென்ன, ஜாம்புவந்தர் எழுந்திருந்து பயபக்தி விசுவாசத்துடன் கைகட்டி வாய்புதைத்து ரகுநாயகரைத் தோத்திரஞ் செய்து மிகவும் வணக்கத்துடன் சபைக்கு முன்னின்று சொல்லுகிறார்.

அனுமாரானவர் தாமரைத்தண்டின் நூல்வழியாகப் போனதும், அவ்விடத்தில் ஆயிரங்கோடி இராட்சதர்களைச் சங்காரஞ் செய்ததும், அக்கினிக் கோட்டையில் மச்சவல்லபனோடு போர்புரிந்து மச்சவல்லபனைத் தன்னுடைய பிள்ளையென்று பிறப்பின் தன்மையாலும் வளப்பாலும் அனுமாறிந்து பின்பு தெப்பக்குளக்கரையில் சேர்ந்து தூரதண்டிகையைக் கண்டு அவ்விடத்தில் சில சங்கதிகளை யறிந்தும், துலாயந்திரக் கோட்டை வாசலில் நடந்த வரலாறும், உள்ளே நுழைந்து அக் காளிகோயிலைக் கண்டு சுவாமியை எடுத்துக்கொண்டு வந்ததும், மயிலிராவணனுடனே அநேக மாயைகள் செய்து அவனைக்கொன்ற விபரமும்: தூரதண்டி குமாரன் நீலமேகனுக்கு விவாகம் செய்வித்ததும் அப்பட்டணத்தின் சமாசாரமும் சுவாமியை எடுத்துக்கொண்டு வந்ததையும், ஆதியோடந்தமாகச் சொன்னார். இராமமூர்த்தியானவர் ஆனந்த சந்தோஷத்தை யடைந்து எழுந்திருந்து ஆஞ்சநேயரைத் தழுவிக்கொண்டு புன் சிரிப்பாகச் சிரித்துச் சொல்லுகிறார். மகா வல்லமையுள்ள புண்ணியவான், யாவருக்குங் கண்ணியவான், உமக்கு நானென்ன உபகாரம் செய்யப் போகிறேன் என்று அனுமாருக்கு ஆசிகள்கூறி வேண்டுவனவற்றைத் தந்து அதிக சந்தோஷத்தை யடைந்திருந்தார்.

இக்கதை படித்தாலும், அச்சிட்டாலும் பக்தி விநயத்தோடு முடித்தாலும் ஒருவர் படிக்கக் கேட்டாலும் படித்தவர்கள் மற்றொருவனுக்குச் சொன்னாலும், அதைச் செவிகொடுத்து கேட்டவர்களை நவக்கிரகங்கள் குரூரஞ் செய்யமாட்டாது. கலிபுருஷன் அணுகான். இதைத் தோத்திரம் பண்ணினவர்களும் துதி செய்து கொண்டவர்களும் நற்பதவி யடைவார்கள்.

